# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

**4** புதிய தொடர்கள் ஆரம்பம்...

KALKI
11.11.2007 ரூ.8.00
96 பக்கங்கள்



# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

11.11.2007





கல்கி

தரம் நிரந்தரம்

## நச்சென்று 4 தொடர்கள்!













**கா**ங்கிரஸ் தலைவர் கிருஷ்ணசாமி மீதான கொலைவெறித் தாக்குதல், திட்டமிடப்பட்டு நிகழ்த்தப்பட்ட சதிவேலை என்று ஒரு பக்கமும், பி.டி. குமார்க்கு குறிவைக்கப்பட்டு, அடையாளம் தெரியாமல் கிருஷ்ணசாமி குத்தப்பட்டார் என்று இன்னொரு பக்கமும் வதந்தி நிலவுகிறது. இந்த நிலையில் நமக்குள் நியாயமான பல கேள்விகள் எழுகின்றன.

★ தேவர் நூற்றாண்டு விழா குருபூஜை தினத்தன்று, நிறைய அரசியல் தலைவர்கள் அந்தப் பகுதிக்கு வருவார்கள் என்று காவல் துறைக்குத் தெரியும். அப்படியிருக்க

# கிருஷ்ணசாமி கொலை முயற்சி கிளப்பும்

தேசியக் கட்சியின் தமிழகத் தலைவரின் பயணத்தின்போது, பாதுகாப்புக்குக் காவல்துறை உடன் செல்லாதது ஏன்?

★ பசும்பொன்னில் தேவர் குருபூஜை நடக்கும் நிலையில், அருகில் முதுகுளத்தூரில் மற்றொரு விழா ஏற்பாடு செய்ய காவல்துறை அனுமதி கொடுத்திருக்கும் பட்சத்தில், அந்த விழாவுக்கு வரப்போகும் தலைவர்களைப் பாதுகாக்கும் பொறுப்பும் காவல் துறையின் கடமையல்லவா?

★ முதுகுளத்தூரில் விழா ஏற்பாடு செய்த லோக்கல் காங்கிரஸ் தலைவர் பூவலிங்கம், ஆப்பநாடு மறவர் பேரவை என்னும் அமைப்பை வைத்துக் கொண்டிருப்பவர். அவருக்கும் அந்தப் பகுதி தலித்துகளுக்கும் எப்போதும் உரசல் இருந்துகொண்டே இருக்கின்றன. இந்தப் பின்னணியைக் கவனிக்காமல் அவர் நடத்தும் விழாவுக்கு அனுமதி கொடுத்தது சரிதானா?



★ பரமக்குடியிலிருந்து முதுகுளத்தூருக்குக் கிளம்பும் முன், 'மிக சென்சிடிவான கன்னிச்சேரி வழியாகச் செல்ல வேண்டாம்' என்று ஏன் லோக்கல் காங்கிரஸ் பிரமுகர்கள் கிருஷ்ணசாமியிடம் சொல்லவில்லை?

★ தேவர் குருபூஜைக்கு வரும் வாகனங்கள் கீழ்கன்னிச்சேரி வழியைப் பயன்படுத்தக் கூடாது என்று, மாவட்ட நிர்வாகம் சில

ஆண்டுகளுக்கு முன் ஆணை போட்ட விஷயம் காவல் துறைக்குத் தெரியுமா...?

★ முதுகுளத்தூர் கலவரத்தின்போது தூவல் கிராமத்தில் ஐந்து பேர் இறந்தார்கள். அங்கு சமீபத்தில் ஒரு நிகழ்ச்சியில் பி.டி.குமார், 'தூவல் கிராமத்திலும் இனி குருபூஜை நடத்தப்படும்' என்று பரபரப்பாய் பேசியது அந்தப் பகுதி தலித் மக்களுக்கு எரிச்சலை ஏற்படுத்தியிருக்கிறது என்பது நுண்ணறிவு பிரிவுக்குத் தெரிந்திருந்ததா?

★ மதுரை, இராமநாதபுர மாவட்டத்தில் தேவர், தலித் சமூகத்தினரிடையே மோதல் ஏற்படும் வகையில் பேசி வரும் பி.டி. குமாரை, தேவர் குருபூஜை நடக்கும் சமயத்தில் கீழ்கன்னிச்சேரி வழியாகப் பயணம் போக அனுமதித்தது ஏன்?

★ கீழ்கன்னிச்சேரி பகுதி தலித்துகள் கடந்த சட்டமன்றத் தேர்தலில் தி.மு.க.வுக்கு வோட்டு போட்டவர்கள்தான். மாறாக, தேவர் இனத்தைச் சேர்ந்தவர்கள் பெரும்பாலும் அ.தி.மு.க. ஆதரவாளர்கள். இந்நிலையில் கருணாநிதியும் முத்துராமலிங்கத் தேவரும் சேர்ந்து காட்சியளித்த போஸ்டர்களும், பேனர்களும் அந்தப்

# கேள்விகள்!

பகுதி தலித்துகளிடையே அமைதியின்மையை உருவாக்கியது என்பதை காவல்துறை அறியுமா?

★ சர்ச்சைக்குரிய பி.டி.குமார் கிருஷ்ணசாமியின் காரைத் தொடர்ந்து வந்தது யதேச்சையான நிகழ்வா?

★ தலைவர்களின் நினைவு தினங்களை ஜாதி அரசியலாக்கி போட்டி போட்டுக்கொண்டு தமிழகக் கட்சிகள் ஆதாயம் தேட முயற்சி செய்கிறபோது இத்தகைய விபரீதங்கள் நிகழாமல் என்ன செய்யும்? இரண்டு முன்னணித் தலைவர்கள் ஒரே நாளில், ஒரே இடத்துக்குப் போகிறபோது பாதுகாப்பு அளிக்க தமிழக காவல் துறைக்குப் போதுமான வசதி, ஆள்பலம் இருக்கிறதா?

– சஞ்சயன்




**கல்கி**

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

தலைமை உதவி ஆசிரியர் :
**மு.மாறன்**

ஆசிரியர் குழு :
**சா.ஜெயராஜ், ஆரணி யுவராஜ்**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன்**

தொலைபேசி :
2225 1522, 2225 0623, 2225 1324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com

சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com

பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு :
ஒரு வருடம் : ரூ. 440/-
ஆறு மாதம் : ரூ. 220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ்.டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

# ரஜினி

சூப்பர் ஸ்டார் வரலாறு

## பாஸ்... மொட்டை பாஸ்

1

**மி**க அதிகமான ரஜினியின் படங்களை இயக்கிய டைரக்டர் என்ற முறையில், ரஜினியின் கோடிக் கணக்கான ரசிகர்கள் மத்தியில், என் மீது எப்போதுமே ஒரு தனி அன்பும் மரியாதையும் உண்டு. தாங்கள்

நடத்துகிற ரசிகர் மன்ற விழாக்கள் தொடங்கி, அவர்கள் வீட்டுத் திருமணம் வரை தங்கள் 'தலைவரே' வந்து கலந்து கொண்டு, தங்களுக்கு மாபெரும் கௌரவத்தை அளிக்க வேண்டும் என்று ரஜினி ரசிகர்கள் அனைவருமே ஆசைப்படுவார்கள். ஆனால், அது பிராக்டிகலாகச் சாத்தியமா? எனவே, அவர்கள் என்னை அழைப்பது வழக்கம். அது போல அண்மையில் ஒரு ரஜினி ரசிகர் தம்முடைய திருமணத்துக்கு அழைத்திருந்தார். அவரது அழைப்பை ஏற்று நான் சென்றபோது, எனக்கு இலேசான அதிர்ச்சி ஏற்பட்டது.

யாராவது, தன் திருமண நாளன்று தலைக்கு மொட்டை போட்டுக் கொள்ளுவார்களா? அந்த ரஜினி ரசிகர் அதைத்தான் செய்திருந்தார். ''என்னப்பா! கல்யாணம் மாப்பிள்ளை மொட்டை போட்டிருக்கியே?'' என்று நான் அவரிடம் கேட்க, அவர் ''ஸ்டைலாக ''சிவாஜி.... தி பாஸ்... மொட்டை பாஸ்'' என்று கூறினார். மறுபடியும் அவரிடம் ''தம்பி! வீட்டுல பெரியவங்க ஒண்ணும் சொல்லலையா?'' என்று கேட்டபோது, ''எங்க வீட்ல எல்லோ



## எஸ்.பி.முத்துராமன்

ருமே சூப்பர் ஸ்டார் ரசிகர்கள்தான் சார்! நீங்க வந்து கல்யாணத்தை நடத்தி வைக்கிறது, சூப்பர் ஸ்டாரே நேரில் வந்து வாழ்த்தினது போல சார்!'' என்றார். மணமகளிடம், ''என்னம்மா! மாப்பிள்ளை மொட்டை போட்டுக்கிட்டு வந்து நிக்கறாரே என்றால், அந்தப் பெண் வெட்கம் மேலிட, ''நானும் சூப்பர் ஸ்டாரோட தீவிர ரசிகை சார்!'' என்றார்.

நான் இந்தச் சம்பவத்தை எதற்காகச் சொல்லுகிறேன் என்றால், இன்றைக்கு மக்கள் மத்தியில், ரஜினிக்கு இருக்கும் மகத்தான பாப்புலாரிட்டிக்கு இது ஓர் உதாரணம்தான். அதுவும் 'சிவாஜி'க்குப் பிறகு ரஜினி இதுவரை தொடாத ஒரு புதிய சிகரத்தைத் தொட்டிருக்கிறார். எந்த ஒரு சாதாரணமான வார்த்தையாக இருந்தாலும் கூட, அதை ரஜினி ஒரு படத்தில் சொன்ன பிறகு, அது தனி அந்தஸ்தைப் பெற்று, ஒரே நாளில் உலகம் முழுவதும் பிரபல

ஒருட்

மாகிவிடுகிறது. பதினாறு வயதினிலே படத்தில் சொன்ன 'இது எப்படி இருக்கு?' பாட்சாவில் சொன்ன 'ஒரு தடவை சொன்னா, நூறு தடவை சொன்ன மாதிரி' தொடங்கி, சிவாஜியில் வரும் 'சும்மா அதிருதில்ல' வரை ஏராளமானவற்றைப் பட்டியல் போடலாம்.

எதிலுமே ரொம்ப ஃபாஸ்ட்டான ரஜினி, சிவாஜி படத்துக்காக ஒண்ணே முக்கால் வருஷத்தில் இருநூறு, முன்னூறு நாட்கள் ஒதுக்கி உழைத்திருக்கிறார். சிவாஜி கேரக்டரை நன்றாக உள்வாங்கிக்கொண்டு, அதற்கேற்றபடி, தன் மனத்தை டியூன் அப் செய்து கொண்டுவிட்டார். ரஜினி படங்களின் ஆக்ஷன், பஞ்ச் டயலாக் காட்சிகளின்போது தியேட்டரே அதிரும். அதுபோலத்தான், காமெடி காட்சிகளும் இருக்க வேண்டும் என்பதால், சிவாஜி படத்தில் கலக்கலான காமெடி காட்சிகளை இடம் பெறச் செய்தார் இயக்குநர் ஷங்கர். அந்தக் காட்சிகளில் புதுமையாக, பட்டிமன்ற பிரபலமான சாலமன் பாப்பையாவையும், ராஜாவையும் நடிக்க வைத்தது பெரிய ப்ளஸ் பாயிண்ட்.



**லண்டனில், 'டாப் 10' வரிசையில் இடம் பிடித்த முதல் தமிழ்ப் படம் சிவாஜிதான்!**

சினிமா என்பது ஒரு டீம் ஒர்க். அதில் ஒவ்வொருவரும் முழுமையான ஈடுபாட்டுடன், வித்தியாசமாகச் சிந்தனையுடனும், தங்கள் பங்களிப்பைக் கொடுத்தால்தான் ஒரு படம் வெற்றியடையும். சிவாஜி படத்திலோ, அகில இந்திய அளவில் முத்திரை படைத்த டைரக்டர் ஷங்கர்-சூப்பர் ஸ்டார் ரஜினி என்ற புதிய காம்பினேஷன். இசையமைப்பாளரோ, இன்று உலக இசை சிம்மாசனத்தில் வீற்றிருக்கும் ஏ.ஆர்.ரஹ்மான். கூடவே தேசிய விருதுகள் பெற்ற ஒளிப்பதிவாளர் கே.வி.ஆனந்த் தோட்டாதரணியைப் பற்றிச் சொல்லவே வேண்டாம். ஆர்ட் டைரக்ஷன் என்பது அவரது ரத்தத்தில் ஊறிவிட்ட ஒன்று. படத்தின் எடிட்டர் ஆண்டனி புதிய தலைமுறை. இவர்களின் கலவையில் ஒரு படம் உருவாகிறதென்றால், அதற்கு ஏற்றபடி ஒரு

**ரசிகர் மன்ற ராஜாக்கள் - 1**

### அரசியல் அலர்ஜி

அண்ணாசாலை தர்காவில் ஆரம்பிக்கும் அப்துல் அலியின் மினி ஊர்வலம். தி.நகர் திருப்பதி தேவஸ்தானம், திருவல்லிக்கேணி ராகவேந்திரர் கோயில்... என மன்றத்து நண்பர்களோடு, ஒவ்வொரு கோயிலாக ஏறி - இறங்கி ரஜினியின் பிறந்த நாளைக் கொண்டாடுவதுதான் இவரின் பத்து வருஷப் பழக்கம். 'எந்தச் சாமியா இருந்தா என்ன... எல்லா சாமியும் ஒரே சாமிதான்' என்று ரஜினி போலவே தத்துவார்த்தமாகப் பேசுகிறார். ஏறக்குறைய இருபத்து மூன்று வருஷங்களுக்கு முன்னர் ஐந்தாறு நண்பர்களுடன், கோடம்பாக்கத்தில் ரஜினிக்காக ரசிகர் மன்றம் ஆரம்பித்த அப்துல் அலிக்கு இப்போது நாற்பத்து மூன்று வயது.

ஆட்டோ ஓட்டுவதுதான் அப்துல் அலியின் முழு நேரத் தொழில். ஆட்டோவின் முன்பக்கம், பின்பக்கம் என எந்தப் பக்கத்தையும் விடாமல் ரஜினிதான் ஆக்கிரமித்துள்ளார். பாட்ஷாவில், ரஜினி ஆட்டோக்காரராக நடித்த பின்னர்தான் ஆட்டோ ஓட்டுவதையே முழு நேரத் தொழிலாக்கிக் கொண்டாராம். இவருக்கு இரண்டு மகன்கள். எட்டு வருடங்களுக்கு முன்னர், மன்றத்தின்

தயாரிப்பாளர் அமைய வேண்டுமல்லவா? அதற்கு இன்று தமிழ்த் திரையுலகில் ஏவிஎம்மை விட்டால் வேறு இல்லை. இது ஏவி.எம். நிறுவனத்துக்கு அறுபதாவது ஆண்டு; ஏவி.எம். ஐயாவுடைய நூற்றாண்டு. இப்படிப்பட்ட ஒரு பெருமை மிகு தருணத்தில், சிவாஜி போன்ற மிகப் பிரம்மாண்டமான படம் எடுப்பது எவ்வளவு பொருத்தமானது?

சிவாஜி படத் தயாரிப்பின்போது சூப்பர் ஸ்டார் அடிக்கடி, ''சார்! நாளாகிக் கொண்டிருக்கிறது என்பது உண்மை; ஏகமாகப் பணம் செலவாகிக் கொண்டிருக்கிறது என்பதும் உண்மைதான். ஆனால், படம் எடுத்து முடித்தவுடன், இப்படிப்பட்ட ஒரு சிறந்த படத்துக்காக நேரத்தையும் பணத்தையும் செலவழித்தது தகும் என்று சொல்லுவீர்கள்'' என்று சொல்லிக் கொண்டிருந்தார். அதையேதான் படம் பார்த்த எல்லோரும் சொன்னார்கள். பாடல்களைப் பார்த்த விநியோகஸ்தர்கள், மீண்டும், மீண்டும் அந்தப் பாடல்களைப் போட்டுக் காட்டும்படிச் சொல்லி பார்த்துப் பார்த்து ரசித்தார்கள்.

இப்படி ஓர் அதிரும் படத்தை எடுக்க இருப்பதாகத் தகவல் வெளியானது முதலே, பலரும் எவ்வளவு பணம் வேண்டுமானாலும் கொடுத்து வாங்குவதற்குத் தயாராக இருந்தார்கள்.

ஆனால், ஏவி.எம்.சரவணனும், அவரது மகன் குகனும் படம் சம்பந்தமாக அனைத்து வேலைகளும் முடிந்து, படத்தின் முதல் பிரதி தயாரானவுடன்தான் பிஸினஸ் பேசினார்கள். அதனால்தான் இதுவரை திரை உலகம் கண்டிராத வகையில், எண்ணூறு பிரின்ட்கள் எடுக்கப்பட்டு சிவாஜி படம் உலகமெங்கும் ஒரே நாளில் ரிலீசானது. லண்டனில், டாப் டென் வரிசையில் இடம்பிடித்த முதல் தமிழ்ப் படம் சிவாஜிதான்!

**சி**வாஜியின் சூப்பர் டூப்பர் வெற்றியை அடுத்து, அனைவர் மனத்திலும் எழுந்துள்ள ஒரு கேள்வி, இத்தனை பெரிய வெற்றியைக் கொடுத்துள்ள ரஜினியால், அடுத்த படத்தை இதைவிடப் பெரிய தொரு வெற்றிப்படமாக்க முடியுமா என்பதுதான். இந்தக் கேள்விக்கு நான் அளிக்கும் பதில் இதுதான்: 'படையப்பா படத்துக்குப் பிறகு, சந்திரமுகி எண்ணூறு நாட்களுக்கும் அதிகமாக ஓடி சரித்திரம் படைத்தது. அந்த வெற்றிக்கு மேல் வெற்றியாக அமைந்தது சிவாஜி. ஆகவே, ரஜினியின் அடுத்த படம் சிவாஜியைவிடப் பெரிய அளவில் வெற்றிபெறும் என்பது நிச்சயம்.

சிவாஜி படத்தின் மிகப்பெரிய ஹைலைட்களில் ஒன்று, கம்ப்யூட்டர் கிராஃபிக்ஸ் தொழில்நுட்பத்தை அபாரமாகப் பயன்படுத்தியதுதான். ரஜினியின் கறுப்பு நிறத்தை, சிவப்பு நிறமாக மாற்றிய கிராஃபிக்ஸ் தொழில்நுட்பத்தைப் பார்த்து உலகமே பாராட்டியது! படத்தின் இன்னொரு ஸ்பெஷாலிட்டி ரஜினியின் இளமைத் துடிப்பான தோற்றம். ரஜினி இளமையாகத் தோன்றுவது புதுமை என்றால், இளம் வயதில் ரஜினிக்கு முதிய வயது கதாபாத்திரத்தைக் கொடுத்து நடிக்க வைத்த அனுபவம் எப்படி இருந்திருக்கும்?

'எங்கேயோ கேட்ட குரல்' என... எனக்குக் கேட்கிறது. உங்களுக்கு? காதைத் தீட்டிக்கொண்டு அடுத்த வாரம் வரை காத்திருங்கள்.

(பயணம் தொடரும்)



* அப்துல் அலி

சார்பாக இரண்டு பேருக்கு இலவச திருமணம் நடத்தியதை, மறக்க முடியாத நிகழ்ச்சியாகச் சொல்லும் அப்துல் அலி, ஒவ்வொரு ஆண்டும் ரஜினி பிறந்த நாளன்று, தனது மன்றத்தின் சார்பில் அன்னதானம் செய்வதை வழக்கமாக வைத்திருக்கிறார். இதுவரை நாற்பத்து நான்கு பேருக்குக் கை வண்டி சைக்கிளை இலவசமாகக் கொடுத்ததைச் சொல்லி நெகிழும் அப்துல் அலிக்கும், ரஜினியைப் போலவே அரசியல் என்றாலே அலர்ஜி!

- ஜெ.ராம்கி

# ரயில்

**வா**ழ்க்கையின் சிக்கலே போன்று தண்டவாளங்கள் பின்னியும் பிரிந்தும், கண்ணுக்கு எட்டிய தூரம் வரையிலும் அதற்கு அப்பாலும் ஓடுகின்றன. அதன் மேல் நடு நாடிபோல், அலுப்பற்று ஒரே நிதானமான வேகத்தில், ஒரு ரயில் வண்டித் தொடர், மரவட்டை போல் நெளிந்து நெளிந்து, விரைந்து செல்கிறது.

"ஜன்னலைத் திற!"

"இல்லேடா கண்ணா - அங்கே உட்காரப் படாதுடா..."

"மாட்டேன். அங்கேதான் உக்காரணும்.

"சனி தொலையட்டும்; திறந்துவிட்டுடேண்டி. எப்படியாவது அழாமலிருந்தால் போறும்."

"இந்தா தொலைச்சுக்கோ."

வண்டிக்குள்தான் எத்தனை பேர், எங்கெங்கிருந்தோ எங்கெங்கேயோ போகிறவர்-

**எ**ஞ்சினின் ஊதல் ஆகாயத்தைக் கிழித்துக்கொண்டு போகிறது. அதுவே ஒவ்வொருவருக்கு அவரவர் மனத்துக்கேற்ப, ஒவ்வொரு விதமாய்ப்படுகிறது. ஒருத்தருக்கு இருப்புக் குதிரையின் உற்சாகமான கனைப்பாயிருக்கிறது. ஒருத்தருக்குப் பின்வரும் விபத்தின் முன்னோலக் குறியாய் மனத்தில் 'சுறுக்'கென்று தைக்கிறது.

மூணு நாலு பேர் சேர்ந்தாற்போல் ஒரே பெஞ்சில் நெரிகின்றனர் -

"என்னப்பா உன்னை நம்பி...."

"என்னத்தே என்னை நம்பி?

"என்னத்தே என்னை நம்பி? நான்தான் அப்பவே சொன்னேனே - குதிரை என்னவோ நல்ல குதிரைதான். ஆனால், அந்த ஜாக்கி ஏறினால் கோவிந்தாதான் என்று! போனால் போறது போ - வர சனிக்கிழமை நைஜாம் பிளேட் இருக்கு போ."

"அடப்பாவி, என்னடா இருக்கு இருக்கு என்கறே? இன்னிக்குப் போனால் வீட்டில் அவள் மூக்கைச் சிந்திச் சிந்திப் போடுவாளேடா! எப்படியடா போய் முழிப்பேன்? அவளுக்கு அப்பப்போ குடும்பச் செலவுக்குக் கொடுக்கிற பணத்தில், அவள் மிச்சம் பிடித்து, கடுகு டப்பாவிலும் மிளகு டப்பாவிலுமாய்ப் போட்டு வைத்திருந்ததையெல்லாம் பிராய்ந்து எடுத்துக்கொண்டு முப்பதை முந்நூறாய்க் கொண்டு வரேன்னு சொல்லி வந்தேன்!"

"என்னடா மூக்காலே அழறே? இங்கே மாத்திரம் வாழறதோ? ஸ்வஸ்திக் வளையல் ஒரு ஜோடி அடித்துப்போன மாசம்தான் அவள் பிறந்த வீட்டில் போட்டார்கள். இன்னிக்குக் கழட்டிக்கொண்டு வந்து இங்கே கப்பங் கட்டியாச்சு. எல்லாம் இப்படித்தான்..."

"ஒரு நாள் வர்றதுதான், ஒரு நாள் போறதுதான் - இதெல்லாம் பார்த்து முடியாதப்பா."

"என்னப்பா பண்ணுவே, இன்னிக்கு உனக்கு இந்த வேதாந்தமிருப்பது ஒண்ணும் விநோதமில்லை. உன் ஜேபியிலே, லட்சணமாய் நூறுரூபாய் நோட்டுகள் இரண்டு பதுக்கியிருக்கையோன்னோ!"

"எனக்கு எல்லாம் ஒண்ணுதான் - என்னவோ - என்னய்யா - என்னய்யா அவ்வளவு அவசரம்? மேலே இடிச்சுண்டு ஓடறே!



**அ**ண்மையில் தமது பிறந்த நாளன்றே மறைந்தார் லா.ச.ராமாமிருதம். இலக்கியவாதிகளின் இதயங்கள் கனத்துக் கிடக்கும் இந்த வேளையில், அவரது 'ரயில்' சிறுகதையின் சில பகுதிகள் சற்றே ஆறுதல் அளிக்கக்கூடும்.

எதிரே நிக்கறேனே கல்லாட்டமா, தெரியலே?''

''இல்லை, மன்னிக்கவும் இந்த ஸ்டேஷனில்தான் இறங்கணும் - அடிபட்டுடுத்தா?''

''அதெல்லாம் ஒண்ணுமில்லேன்னா! பரவாயில்லே, போங்கோ - வண்டி பாஸாயிடுத்தே...'

''டிக்கெட், டிக்கெட்....''

''இதோ உன் ஜோபியிலே - ஐயையோ!''

''என்ன என்ன?'' வண்டி முழுவதும் ஒரே கலவரம், ஆரவாரம்.

''பைக்குள்ளே தோளா, கொட்டிடுத்தா?''

''ஐயையோ! என் காசைக் காணோமே - கடியாரத்தைக் காணோமே - பர்ஸ் - டிக்கெட்...''

''அதனால் என்னப்பா, நீதான் சொன்னையே - இருந்தாலும் ஒண்ணுதான், இல்லாவிட்டாலும் ஒண்ணுதான் என்று - எல்லாம் நீ சொல்லிக் கொடுத்த வேதாந்தம்தானே.''

''திருட்டா? யார்? யார்?''

''யார், யார் என்றால் உங்கக்கிட்டே சொல்லிக்கொண்டு போவானா? எல்லாம் அவரே வழிகூட்டியனுப்பிச்சாரே அந்த ஆசாமிதான் கை வெச்சிருக்கணும். இல்லாட்டா அவனுக்கென்னையா அவ்வளவு அவசரம்.''

''இதே மாதிரிதான் ஸார், நான் பத்து வருஷங்களுக்கு முன்னால் விருத்தாசல மார்க்கத்தில் போய்க்கொண்டிருக்கையில்...''

''... டாமிட்! டிக்கெட், டிக்கெட்....''

''ஒருத்தரையும் குற்றம் சொல்வதற்கில்லை. இந்த முழி பிதுங்கும் கூட்டத்தில் அவாளவாள் ஜேபியைப் பற்றியே சந்தேகம் வந்துவிடுகிறது - தன் பையென்று நினைத்து இன்னொரு சட்டையில் கைவிட்டுவிட்டான்! அவ்வளவுதான்...''

**வ**ண்டியின் ஊதல் எல்லாரையும் பரிஹசிக்கிறது. விதியின் விலக்க முடியாத கதி போன்றிருக்கிறது. வண்டி ஒரே திக்கில் செல்லும் தீர்மானம்.

''டேய், சொன்னத்தைக் கேளு - நீ ரொம்ப எட்டிப் பாக்கறே - காலை வாரி விட்டுடப் போறது...''

''நீ என் காலைப் புடிச்சுக்கோ - அதை விட உனக்கு என்னடி வேலை?''

அந்தப் பக்கம் முழுதும் இதைக் கேட்டதும் ஒரே சிரிப்பு.

''பேஷ் - பிழைக்கிற பிள்ளைதான்! என்ன இருந்தாலும் ஆண் பிள்ளைகள்



ஆளப்பிறந்தவர்கள்தான்.''

பிள்ளையைப் பெற்றவர்களுக்கு உள்ளூற ஆனந்தம் பொங்குகிறது.

''என்னடா, உனக்கா உனக்கு இன்னமும் சிசுருஷை பண்ணிண்டு இருக்கணுமா! அவளுக்குக் கல்யாணம் ஆன அப்புறங்கூட?''

சர்க்கரையென்று நினைத்து உப்பை வாயில் வைத்துக்கொண்ட முகம்போல், மாப்பிள்ளை மூஞ்சியில் அசடு வழிகிறது. அவனுக்குக் கல்யாண வெறி இன்னமும் தணிந்த பாடில்லை - மாமனார் வீட்டில் க்ஷேத்ராடனம் போகப் போகிறார்களென்று வீட்டில்கூடச் சொல்லிக்கொள்ளாமல் 'டிமிக்கி' கொடுத்துவிட்டு வந்திருக்கிறான். அவன் மாமியார் ஏதோ பெரும் வெற்றியைக் கண்டுவிட்டதுபோல், பெண்ணையும் மாப்பிள்ளையையும் ஒன்றாய் உட்கார வைத்துவிட்டு மனமகிழ்கிறாள்.

அவனுக்குள் அவனையும் அவளையும் சுற்றித்தான் உலகமே சுழல்வதாய்த் தியானம். மணலில் தலையைச் செருகிக்கொண்ட நெருப்புக் கோழி போல், ஒருவரும் தன்னைப் பார்க்கவில்லையென்று அவன் நினைத்துக்கொண்ட போதெல்லாம், அவள் தோள் பக்கமாய்க் கையைப் போடுகிறான். இந்த விரசத்தில் தட்டும் வெறுப்பில் அவளுக்கு முகம் சுளிக்கிறது. அதே சமயத்தில் ஒரு திருட்டுச் சந்தோஷமும் அந்த வெறுப்பில் கலந்திருப்பதால், சுளிப்புக் கரைந்து முறுவலாய் மாறுகிறது. இப்படியே அவள் பக்கத்தில், அவள் புதுப் புடைவை சலசலத்துக்கொண்டு, உடல் பட்டதும் படாததுமாய் இருவரும் உராய்ந்துகொண்டு, இப்படியே - இந்த ரயில் எப்பொழுதுமே எங்கும் நிற்காமல் போய்க்கொண்டே இருக்காதா?



''இந்த ரயில் எப்போதான் நிற்குமோ தெரியவில்லை!''

''ஏன் இப்படிக் கரிச்செடுக்கறேள்? எப்பவோ ஒரு தடவை சனிக்கிழமையும் ஞாயிற்றுக்கிழமையும் சேர்த்தாப்போலே லீவு வரதே! வேளாவேளை எந்தெந்த ஊரிலேயிருந்தோ பெருமாளைச் சேவிக்கணும்னு வரான் - நாம் இப்படிப் பக்கத்து ஊரிலேயிருந்துண்டே ஒரு தடவையாவது பார்க்காமலிருக்கிறதான்னு கூப்பிட்டால்...''

''இதோ பார் - எனக்கு எங்கேயாவது போய்த் தலையை சாய்ச்சால் போறுமென்னிருக்கு. இத்தனை குழந்தையும் குட்டியும் மூட்டையும் முடிச்சுமாய்ப் போய், இந்தப் புண்ணியத்தைச் சம்பாதிச்சுண்டு வரணும்னு எனக்கு ஆசையே இல்லை.''

''உங்கள் கூட்டமே நாஸ்திகக் கூட்டம்தானே. உங்களுக்கெல்லாம் ஒரே ஆசைதான். புகையிலையைப் போட்டுண்டு கண்ட இடத்தில் துப்பவும் சீட்டாடிண்டு இருக்கவுமேயொழிய..''

''அம்மா, தாயே...''

''நீங்கள் என்ன வேணுமானாலும் சொல்லலாம். நீங்கள் சொன்னாலும் சொல்லாவிட்டாலும் நான் தாய்தான். நானும் கலம் பெத்தாவிடுத்து!''

''ஐயோ, நம்ம வம்சாவளியெல்லாம் இங்கே வந்து கூடவா படிக்க வேண்டும்!''

''ஏன் இப்படி!''

இல்லை, மற்றதொன்றும் கேட்கவில்லை. வண்டியின் ஊதல் எல்லாச் சத்தத்தையும் அடக்கிவிடுகிறது.

தடக்-தடக்-தடக்

வண்டி விழுங்க விழுங்க, தண்டவாளம் திரௌபதியின் துகில் போல் நீண்டுகொண்டே போகிறது. அது வளைந்து சுழன்று மறுபடியும் வெறித்துச் செல்லும் ரீதியைப் பார்க்கையில் அதுவும் காலத்தைப் போல் எல்லையே அற்றது போலிருக்கிறது. எங்கெல்லாம் எப்படியெல்லாம் போகிறது! ஓர் இடத்தில் தாபத்தால் உடைந்த இதயம் போல், பூமி பளார் பளார் என்று அங்கங்கே, தண்ணீரே காணாமல் வெடித்திருக்கிறது.

வேளை முதிர முதிரக் கவியும் இருளில், ஒரு விளக்கு ஒளி மினுக்கென்று தோன்றுகிறது. கண்மூடி வழிகாட்டும் லட்சணம்போல்,

எட்டியும் கிட்டியும் நிலையற்று எரிகிறது.

ரயிலில் பெஞ்சோரத்தில் ஒருத்தி. அவள் போய்ச் சேரும் இடத்தில் என்ன காத்திருக்கிறதோ அவளுக்கு! 'வண்டி இவ்வளவு சீக்கிரம் பிரயாண முடிவை நெருங்குகிறதே' எனும் பயங்கரம் ஒரு பக்கம்; 'ஐயோ! இந்தச் சங்கடத்தைச் சகிக்க முடியவில்லையே! ஒரே வழியாய்ச் சுருக்கப் போய்ச் சேர்ந்துவிட மாட்டோமா!' எனும் உள்ளப் பதைப்பில், உயிரே ஊசலாடுகிறது.

***"ஐயோ நான் படும்பாடு சிவனே... உலகோர், நவிலும் பஞ்சுதான் படுமோ - சொல்லத் தான் படுமோ!"***

''இதென்ன கஷ்டம்! நாம் இடமில்லாமல் படும் கஷ்டம் போதென்று பிச்சைக்காரர்களின் உபத்திரவம் வேறேயா? இந்தக் கும்பேனிக்காரன் எல்லாத்துக்கும் ஒரு வரி போடறானே, இவாள் மேலே ஒண்ணு போடப் படாதோ?''

''ஏன் ஸ்வாமின்னு, உங்களுக்கு அவ்வளவு தயாளம்! அவன் வயிற்றுக் கொடுமை; ஏதோ கத்திவிட்டுப் போறான்.''

''ஏதேது அவனுக்குக்கூட வராத கேபாம் பெரியவாளுக்கு வராப் போல யிருக்கு! பெரியவா ஏதேனும் வாரிசோ?''

''வாரிக என்ன சுவாமி? பார்க்கப் போனால் உலகத்திலே எல்லாருமே பிச்சைக்காரான்தானே! நான் ஒரு பிச்சைக்காரன், நீரும் ஒரு பிச்சைக் காரன்...''

''என்னடா சொன்னாய் என்னை! நீ வேணுமானால் பிச்சைக்காரனாயிரு.. என்னை... பல்லை...''

''சீச்சி...''

''சூ... சூ....'' இது ஒரு சமாதானக்காரர்.

வண்டி முழுதும் ஏகக் கூச்சல்; களேபரம்.

தடக்-தடக்-தடக்- இது வண்டி.



''என்ன சிரிக்கிறேள்?''

''என்னத்துக்கு அழ வேண்டும் என்றுதான் சிரிக்கிறேன்.''

''என்ன புதிர் போட ஆரம்பிச்சுட்டேளே?''

''புதிரேயில்லை. எல்லாம் வெட்ட வெளிச்சம்தான். எல்லாம் கண்ணெதிரே நடக்கிறதுதான். ஒரு சிமிழுக்குள்ளேயே உலகம் அடங்கியிருக்கிறது. உனக்கு ஒரு பெரிய விந்தையாயில்லையா?''

''அதுவும் சரிதான். நீயும் ரொம்பக் கஷ்டப்பட்டு விட்டாய்; இல்லையென்றா சொன்னேன்? ஏதோ நீ பட்டதில் பாதியாவது நான் பட்டிருக்கமாட்டேனா? உனக்கு இருந்தது எனக்கும் இருந்திருக்காதா?''

''இப்போ என்னத்துக்கு அதெல்லாம்?''

''அதைத்தானே சொல்ல வந்தேன்! உப்புமில்லை, புளியுமில்லாததற்கெல்லாம் உறுமிக்கொண்டும் கறுவிக் கொண்டும் குலாவிக் கொண்டும், கொக்கரித்துக் கொண்டும் இருந்திருக்கிறோம்; இருக்கிறோம். ஆனால் இப்போ...''

''என்ன, டக்குனு நிறுத்திட்டேள்?''

''இப்போது நமக்கும் வயசாகிவிட்டது. நீ முந்திக் கொள்கிறாயோ, நான் முந்திக் கொள்கிறேனோ. எல்லாம் பட்டாய்விட்டது. சந்தோஷப்படவும் அலுப்பா இருக்கிறது. துக்கப்படவும் தெம்பில்லை. என்னவோ போகிறோம். வருகிறோம். எங்கே போகிறோம்; எதற்காக என்னும் அக்கறையும் அதிகமில்லை. இந்த மாதிரி சமயங்களில், உலகத்தைவிட்டு நாம் ஒதுங்கி நின்று, அதன் வேடிக்கையைக் கவனிக்கும்போது மனத்துக்கே ஒரு நிம்மதி பிறக்கிறது. ஏதோ சந்தேகம் தெளிந்தாற்போல் ஒரு கனம் குறைகிறது. இதைச் சரியாய் வெளியில் சொல்லக்கூட முடிகிறதில்லை. மனதுக்கு மனதுதான்.

''அதே சமயத்தில் உலகத்தில் இருக்கும் சுகதுக்கங்களுக்கும் குறைவில்லை. உலகம் மாத்திரம் சுழன்று கொண்டுதான் இருக்கிறது. காலமும் கடந்து கொண்டிருக்கிறது. இத்தனையையும் ஏந்திக்கொண்டு இந்த வண்டி போகிறமாதிரி. பார், இதுவும் உலகத்தின் நடுநாடி போல், அடித்துக் கொள்கிறது ஒரே நிதானமாய் தடக்-தடக்-''

தடக்-தடக்-தடக்-தடக் ●

# வட்டமேஜை

**மூ**ன்றாவது அணியிலிருந்து விடுபட்டு, எதிர் வரும் கட்சியின் கரவிணைப்புக்குத் தலையசைக்கின்ற முன்னாள் முதல்வரின் (ஜெ) மூக்கினை நன்றாக அறுக்கிறது கார்ட்டூன்!

**– கோவில்பட்டி -2, ச.ஆ.கேசவன்**

**உ**ள்ளும் புறமும் பகுதியில் இடம்பெற்ற, போபால் பயங்கரம் கட்டுரையைப் படித்து முடித்ததும் கண்களின் ஓரம் ஈரத்துளிகளின் அணிவகுப்பு!

**– விழுப்புரம், கா.சங்கர்**

## ஸ்பீடு போஸ்ட்

**யு**கபாரதியின் 'கேடில் விழுச் செல்வம்' கவிதை, ஆழ்ந்த அனுபவக் கருத்தினை அற்புதமாய் வெளிப்படுத்தியது.

**வயலூர், பா.அச்சுதன்**

**ர**ஜினியைப் பற்றியும், தசாவதானியாகத் திகழும் கமலைப் பற்றியும் அக்கு வேறு ஆணிவேராக அலசியிருந்த ரவிக்குமார் பேட்டி ரசனைமிக்கதாய் இருந்தது!

**எரகுடி, துரை.ராமகிருஷ்ணன்**

**சு**தா சேஷய்யனின் ஸ்ரீலலிதா படிக்கப் படிக்க பரவசமாகவும்; பக்தி உணர்வை ஊட்டக் கூடியதாகவும் உள்ளது.

**கச்சிராயர்குப்பம், ஆர்.கோவிந்தசாமி**

**ந**ம் நாட்டுக் கட்டடங்கள் நிலநடுக்கத்தால் பாதிக்கப்படும் தன்மைப் பற்றி மத்திய-மாநில அமைச்சர்கள் அவசரமாகக் கவனிக்க வேண்டும்.

**சென்னை - 24, கே.ஆர்.ராமச்சந்திரன்**

**சே**து சமுத்திர திட்டத்தைப் பற்றிய நிதர்சனமான உண்மைகளை அரசியல்வாதிகள் அறிந்திருந்தும், கண்களை மூடிக் கொண்டு இருக்கிறார்கள். மக்கள் ஏமாளிகள் அல்ல. எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறார்கள்.

**பெங்களூரு, எஸ்.லலிதா**



## ரஜினி... ரசனை... ரவிக்குமார்!

**க**ம்யூனிஸ்டுகளின் கீழ்த்தரமான பிளாக்மெயில் மிரட்டல்களுக்கு நேர்மையான மன்மோகன் சிங் பணிந்தது துரதிருஷ்டமானது!

**கோவை, ஆர்.ராமசுப்ரமணியன்**

**'ஜோ**டி நம்பர் ஒன்' நிகழ்ச்சியைத் தொலைக்காட்சியில் பார்த்தபோது ஏற்பட்ட உணர்ச்சியைவிட, குகம்புராஜின் ஜாலி ஸ்டோர்ஸை, படித்தபோது உண்டான சிரிப்பை அடக்க முடியவில்லை.

**மயிலாடுதுறை, ஆரூர் அரசு**



# கல்கி




2007 நவம்பர் 11
சர்வஜித் ஐப்பசி 25
மலர் : 66
இதழ் : 15


தமிழ்த்திரு
நாடுதன்னைப்
பெற்ற தாயென்று
கும்பிடடி பாப்பா

*- பாரதியார்*

## மதம் பிடித்த ஜனதா தளம்!

**கொ**டுத்த வாக்குறுதியைக் காப்பாற்றுவது அவசியமில்லை;

குதிரை வியாபாரத்தில் ஈடுபடுவது தவறில்லை;

பொது வாழ்வில் இருப்பவர்களுக்குக் கொள்கை, தன்மானம் என்பதெல்லாம் பொருட்டில்லை;

பதவியில் இருந்துகொண்டு செல்வாக்கைப் பயன்படுத்தி காசு பார்ப்பது மட்டுமே அத்தியாவசியம்.

- கர்நாடகத்தில் கடந்த சில வாரங்களாக நடந்த அரசியல் கூத்து இவற்றைத்தான் உணர்த்துகிறது!

அரசியல்வாதிகளுக்கு தார்மிக நெறிகளில் அக்கறை இல்லை என்பது நமக்கு இதுகாறும் நன்றாகவே தெரிந்த விஷயம்தான். ஆனால், கர்நாடகாவில் நிகழ்ந்த கேவலம், அரசியல்வாதிகளுக்கு அந்நெறிகளைக் காப்பதாகப் பாசாங்கு செய்யும் கட்டாயம்கூட இன்றைக்கு இல்லாமல்போய் விட்டதைத்தான் உணர்த்துகிறது. பட்டவர்த்தனமாக ஒப்பந்தங்களை, வாக்குறுதிகளை மீறி, பகிரங்கமாக குதிரை வியாபாரத்துக்கு முயன்றிருக்கிறது மதச்சார்பற்ற ஜனதா தளம். மாற்று ஏற்பாடுக்கு காங்கிரஸ் மசியவில்லை என்று தெரிந்த பிறகு, அந்தர் பல்டி அடித்து, மறுபடி பா.ஜ.க.வுடன் இணைசேரத் தயாராகிவிட்டது. கண் துடைப்புக்காக, யெதியூரப்பா முதல்வர் பொறுப்பை ஏற்றால், கூட்டணி ஆட்சிக்கு ஒப்புக்கொள்வதாக இப்போது கூறுவது கேவலம். இதையே ஆட்சி அமைப்பு ஒப்பந்தப்படி முன்பே முறையாகச் செய்திருந்தால் கௌரவமாக இருந்திருக்கும்.









பா.ஜ.க. தலைமைக்காவது தன்மானமும் கௌரவமும் இருக்க வேண்டாமோ? கொடுத்த வாக்கை மீறியதோடல்லாமல், காங்கிரஸ் கூட்டணிக்கு வேறு முயன்ற மதச் சார்பற்ற ஜனதா தளத்தை நிராகரிப்பதற்குப் பதிலாக, திரும்பவும் அதே கட்சியுடன் சேர்ந்து ஆட்சி அமைக்கவே துணிந்திருக்கிறது. இந்தக் கூத்துக்கிடையே இரு கட்சிகளிலும் உட்கட்சிப் பூசல்கள், குதிரை வியாபார முயற்சிகள் வேறு!

அரசியல் நெருக்கடியை உண்டு பண்ணி, ஜனாதிபதி ஆட்சிக்கு வழிவகுத்த பிறகு, இரண்டு கட்சிகளும் மீண்டும் இணைந்து ஆளுநரிடம் போய் பெரும்பான்மையை நிரூபிக்க முயன்றிருப்பது அல்பத்தனம் என்பதுடன், ஜனநாயக மரபுகளைக் கேலிப் பொருளாக்கும் காரியம்.

இந்த அழகில், சரியான முடிவை எடுக்க ஆளுநருக்கு பா.ஜ.க. இருபத்துநான்கு மணி நேர கெடு வைக்கிறது!

சட்டப்படியும் அரசியல் சாசன அடிப்படையிலும் பெரும்பான்மை பலமுள்ள கட்சி / கூட்டணியை ஆட்சி அமைக்க அழைக்க வேண்டும். அந்த அடிப்படையில் ஆளுநர் ஜனதா தளம் (எஸ்) - பா.ஜ.க. கூட்டணியை அழைக்க, யெதியூரப்பா தலைமையில் 'புது' அரசு அமையக்கூடும். ஆனால், எந்தக் கூட்டணி அரசியல் நெருக்கடியை உண்டாக்கி, சட்டசபையைத் தொங்கலில் வைக்கும்படி செய்ததோ, அதே கூட்டணி மீண்டும் ஆட்சிக்கு வருவது தார்மிக ரீதியில் தவறு; ஜனநாயக நெறிகளுக்கு முரணானது.

இந்த விஷயத்தில் கர்நாடக மக்களுக்கு இழைக்கப்பட்டுள்ள துரோகத்தை இவ்விரு கட்சிகளும் இணைந்து என்ன பிராயச்சித்தம் செய்தாலும் துடைக்க முடியாது. இந்தக் கேலிக்கூத்து மோசமான முன்னுதாரணமாகிப்போய் வேறு பல மாநிலங்களிலும் இது போன்ற அநியாயங்கள் நிகழ வழி செய்கிறது. குதிரை வியாபாரம் மூலம் கூட்டணி மாறும் அருவருக்கத்தக்க அநீதிக்குப் பாதுகாப்புடன் கூடிய உரிமம் வழங்கும் முன்னுதாரணமாக இந்த கர்நாடகா கேவலம் நிலைத்துவிடும். இந்தக் கேவலம் நிகழ முக்கிய காரணகர்த்தாவாகத் திகழ்ந்தவர் நாட்டின் முன்னாள் பிரதமர் தேவேகௌடா என்பது தேசத்துக்கே தலைகுனிவு! ●

# விமர்சனம்

# ராக்கெட் ராஜா!

'டாபன் ஃபயர்'ங்கற தாய்லாந்துப் படத்தைத் தமிழ்ல 'ராக்கெட் ராஜா'வாக்கியிருக்காங்க. நெல் உற்பத்தியை அதிகரிக்க ஊர்ப் பண்ணையார் டிராக்டரை இறக்குமதி செஞ்சு உழவர்களை வாங்கத் தூண்ட, பணமில்லாம வாங்க மறுக்குற மக்களைப் பழிவாங்குறார். ஆனால், அவரே எப்படி பழிவாங்கப்படறாருங்கறதை டமால் டுமீல்னு சொல்லியிருக்காங்க. மந்திரஜால வித்தைகளும் கதைக்குப் பக்காவா கைகொடுத்திருக்கு.

ஹீரோவா வர்ற டான் பண்ற அட்டகாசங்கள் செம த்ரில். ராக்கெட்டை வச்சு எதிரிகளைப் பந்தாடுறதைப் பார்க்கும்போது பிரமிப்பு பிரமிடு அளவுக்கு உயருது. பெத்தவங்கள அழிச்சவங்களைக் கொல்றதுக்குத் தான் டான் விஸ்வரூபமெடுத்து பழிவாங்கறார்ங்கற ஃப்ளாஷ்பேக் அசத்தல்.

ரெண்டாவது ஹீரோவா வர்ற சாமத்தும் சாதாரணமான ஆளு இல்ல. மந்திரம், மாயாஜாலமெல்லாம் செஞ்சு குழந்தைகளையும் ஈஸியா கவர்ந்துடுறார். கதாநாயகி கன்யா கொள்ளை அழகு. கண் கலங்க வைக்குற நடிப்பைத் தந்து 'நான் விளையாட்டு பொம்மை இல்ல'ன்னு நிரூபிக்குறாங்க. வில்லனா வர்ற லமாய் ஜமீன்தாரர், நம்ம ஊர் வில்லனை அப்படியே பிரதிபலிக்குறார். மிரட்டி உருட்டி அதட்டினாலும் அவர் ஜம்பம் பலிக்காதது பாவம்தான். காமெடில அசத்தறார். வில்லன் 2வான பன்னாரிட்டாகிக்கு சோறு கண்ட இடம் சொர்க்கம். சண்டையைக்கூட விட்டுட்டு சாப்பிடப் போயிடுறாருன்னா பாருங்களேன்!

படத்துக்கு மிகப்பெரிய ப்ளஸ் பின்னணி இசை. காதலும் அதிரடியும் கலந்து மிரட்டியிருக்காங்க. ஒளிப்பதிவும் இயக்கமும் வோங் பிம். கண்ணை உறுத்தாம காட்சிகளை அழகா பதிவு பண்ணியிருக்கார்.

கதை என்னமோ பழசுதான். ஆனா, திரைக்கதைல காட்டப்பட்டிருக்குற வேகம், படத்தை சீட் நுனிக்குக் கொண்டு வந்து பதற வைக்குது. டப்பிங் ஆர்ட்டிஸ்டுகளுக்கு 'ஜே' போடலாம்!

- யுவான்சுவாங்

# 'யுவஸ்ரீ கலா பாரதி' விருது



மதுரை பாரதி யுவ கேந்திரா சார்பில் இசை, படிப்பு, ஓவியம், சமூகப்பணி, பரதநாட்டியம், பேச்சு, கவிதை, விளையாட்டு UC MAS, ABACUS ஆகிய துறைகளில் ஏதேனும் ஒரு துறையில் சிறந்து விளங்குகிற L.K.G முதல் 12ம் வகுப்பு வரையிலான மாணவ, மாணவியருக்கு **'யுவஸ்ரீ கலா பாரதி'** என்ற விருதினையும் கல்லூரி மாணவ மாணவியருக்கு **'சுவாமி விவேகானந்தர்'** விருதினையும் ஒவ்வொரு ஆண்டும் மாவட்ட வாரியாக வழங்கி வருகிறோம். ஒவ்வொருவருக்கும் வெள்ளிக்கேடயம் மற்றும் விருதுக்கான பெரிய அளவிலான பட்டயமும், ஸ்படிக மாலையும் வழங்கப்படும்.

தமிழ்நாடு மற்றும் பாண்டிச்சேரி உள்ள அனைத்து மாவட்டங்களைச் சார்ந்த பள்ளி, கல்லூரி மாணவ, மாணவியருக்கு இவ்விருது வழங்கும் நிகழ்ச்சி அந்தந்த மாவட்டத்தில் நடைபெறும். LKG முதல் +2 மற்றும் கல்லூரி மாணவ, மாணவியர்கள் பிற துறைகளில் பரிசு பெற்றவர்கள் இவ்விருதுக்கு விண்ணப்பிக்கலாம். மேலும் கடந்த மூன்று ஆண்டுகளில் 10ஆம் வகுப்பு மற்றும் ப்ளஸ் 2 பொதுத்தேர்வில் 80% மற்றும் அதற்கு மேல் மதிப்பெண் பெற்ற மாணவ, மாணவியர்களும் தங்களின் மதிப்பெண் சான்றிதழின் ஜெராக்ஸ் பிரதியுடன் **நெல்லை பாலு, நிறுவனர்-பாரதி யுவ கேந்திரா, G-28, சாந்தி சதன் குடியிருப்பு, கோச்சடை, மதுரை-16. செல் 94439-30815, 94426-30815.** என்ற முகவரிக்கு ஒவ்வொருவருக்கும் வீட்டு முகவரி, தொலைபேசி எண்ணுடன் கூடிய ரூ.10 அஞ்சல் தலை ஒட்டப்பட்ட சுய விலாசமிட்ட கவருடன் அனுப்பிட கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

தேர்வு செய்யப்பட்டவர்களின் விவரம் அவர்களது வீட்டு முகவரிக்கு அனுப்பப்படும். விருது வழங்கும் விழாவில் அவரவருக்கு எடுக்கப்படும் புகைப்படச் செலவை ஒவ்வொருவரும் கண்டிப்பாக ஏற்க வேண்டும்.

ஆசிரியர்களுக்கு வழங்கப்படுகிற 'வித்யா சேவா ரத்னா' விருதுக்கு நடுநிலை, உயர்நிலை, மேல்நிலைப் பள்ளியைச் சார்ந்த (Matric & State board, CBSE) முதல்வர்கள் மற்றும் தலைமை ஆசிரியர்கள் அவர்களைப்பற்றிய தன் விபரக்குறிப்பினை (Bio-Data) எங்கள் முகவரிக்கு அனுப்பிட அன்புடன் வேண்டுகிறோம். நிகழ்ச்சி அந்தந்த மாவட்டத்தில் நடைபெறும்.

# இயக்குநராகும்

# விஷால்!

ஹாட்ரிக் வெற்றி பெற்றதில் டைரக்டர் பூபதி பாண்டியனுக்கு அதீத மகிழ்ச்சி. 'தேவதையைக் கண்டேன்', 'திருவிளையாடல் ஆரம்ப'த்தைத் தொடர்ந்து 'மலைக்கோட்டை'யும் மக்களின் மனதில் இடம்பிடித்துவிட்ட உற்சாகத்தோடு நம்மிடம் பேசினார்...

''என் மனசுல உள்ள சந்தோஷத்தை விவரிக்க வார்த்தையே இல்ல. தொடர்ச்சியா என்னோட மூணு படங் களையும் ஹிட்டாக்கிக் கொடுத்த தமிழ் சினிமா ரசிகர்களுக்கு, என் அடுத்த படத் தையும் அவங்க ரசிக்கிறா மாதிரி கொடுக் கறதைத் தவிர, வேற என்ன கைமாறு செய்யப் போறேன்!

'மலைக்கோட்டை' உண்மையில் நான் அஜீத்துக்காக ரெடி பண்ணின கதை. ஆனா எனக்குக் கிடைச்சதோ விஷாலோட கால்ஷீட். சரின்னு அவருக்கேத்த மாதிரி அங்க இங்க சரிபண்ணி, படம் பண்ணிட் டேன். இப்பப் பலரும் விஜய் கதைல விஷால் நடிச்சிட்டதா பேசறாங்க. என் இயக்கத்துல விஜய் நடிச்சா, அதைவிட எனக்கு வேற என்ன சந்தோஷம்!

விஷால் ரொம்ப ஃப்ரெண்ட்லியான டைப். என்னோட இயக்கத்துல எந்த விதத்திலும் அவர் குறுக்கே நின்னதில்ல. நான் பண்ற வேலை பத்தி அவருக்கு நல்லா தெரியும். இன்னொன்னு, நல்ல விஷயமா இருந்தா யார் சொன்னாலும் நான் கேட்டுக்குவேன். எல்லாத்துக்கும் மேல விஷால் ஒரு திறமையான உதவி இயக்குனர். கூடிய சீக்கிரம் விஷாலை இயக்குநரா பார்க்கலாம்.

'மலைக்கோட்டை' ஆக்ஷன் படமா, காமெடிப் படமான்னு பலருக்குச் சந்தே கம். ஆக்ஷன், காமெடி, ரொமான்ஸ், க்ளாமர்னு எல்லாம் சரிவிகிதத்துல கலந்த மசாலா அது. அந்தந்த தரப்பு ரசிகர்களுக்கு எது தேவையோ, அதைத் தேவையான விதத்துல கொடுத்திருக்கோம். நாங்களே எதிர்பார்க்காத அளவுக்குப் படத்துக்கு செம ரெஸ்பான்ஸ். அதுவும் காமெடிக் காட்சிகளுக்குப் பயங்கர அப்ளாஸ். குறிப்பா ஆஷிஸ்வித்யார்த்தியும் பொன் னம்பலமும் மாறுதலான முகத்தைக் காட்டி னதுக்கு ரொம்பவே வரவேற்பு.

இந்த மாதிரி பக்கா கமர்ஷி யல் ஃபார்முலாவோட ஒரு வெற்றிப் படத்தைத் தரும் போதே, சிலர், கமர்ஷியல் இல்லாமப் படம் பண்ண மாட்டீங்களான்னு கேக்கறாங்க.

## டைரக்டர் பூபதி பாண்டியன் பேட்டி

ஏன் அப்படிப் பண்ணணும்னு நான் அவங்களைத் திருப்பிக் கேக்கறேன். என்னோட தயாரிப்பாளர், படத்துக்கு அப்புறம் காணாமப் போறதை நான் விரும்பல. என்னைக்கும் அவங்க படம் எடுத்து, என்னை மாதிரி பலருக்கு வாய்ப்புத் தரணும். அதே மாதிரி எனக்கு ஹீரோவா மாறுகிற எண்ணம் துளிக்கூட கிடையாது. சும்மா என் படத்துல ஒரு சீன்ல வருவேன், அது வேற. மத்தபடி எனக்கு நானே எதிரியாக விரும்பல. சில டைரக்டர்கள் நடிகரா மாறி ஜெயிச்சிட்டும் வர்றாங்க. அது அவங்களோட தன்னம்பிக்கையையும் உழைப்பையும் காட்டுது. என்கிட்டயும் அதுபோல தன்னம்பிக்கையும் உழைப்பும் இருக்கு. ஆனா, அதை இயக்கத்துல மட்டும் செலுத்தினா போதும்னு நினைக்கறேன்.

அடுத்து என்னோட தம்பி வாழ்க்கைல நடந்த ஓர் உண்மைச் சம்பவத்தை அடிப் படையா வெச்சு ஒரு படம் பண்ணப் போறேன். ஹீரோவா என்னோட தம்பி தான் பண்றார். புதுமுகமா இருந்தாலும், எல்லாருக்கும் பிடிக்கிற முகமா மாத்திக் காட்டப் போறேன். விக்ரம் சார்கூட 'ராஜா வேஷம்'னு ஒரு படமும் பேசிட்டிருக்கேன். உறுதியானப்புறம் அதுக்கான தகவல்கள் தானா உங்களைத் தேடி வரும். 'மலைக் கோட்டை' படத்துக்கு முன்னாடியே லிங்கு சாமி சாரோட புரொடக்ஷன்ல ஒரு படம், மோகன் நடராஜன் சாரோட ஒரு படம் கமிட் ஆகியிருக்கேன். அந்த வேலைகளும் போயிட்டிருக்கு. கடவுள் அருளால எல்லாம் நல்லா கைகூடி வரும்னு நம்பறேன். ரசிகர்களை நம்பித்தான் நாங்க இருக்கோம். அவங்கதான் எங்களுக்கு முதலாளிங்க. அவங்க மனசு குளிர்றபடிதான் நான் என்னைக்கும் படம் எடுப்பேன், இது உறுதி!''

– ஆ.முத்துராமலிங்கம்



“பழந்தின்னி வெளவால் கிராமம். பார்க்க வர்றீகளா'' என்று வலை வீசியது ஒரு சேலத்துப் பட்சி. ஆர்வம் பிடிபட, உடனே கிளம்பினோம். தலைவாசல் அருகே பத்து கி.மீ. தூரத்தில் இருக்கிறது ஊனத்தூர் கிராமம். அங்கிருந்து ஒரு கி.மீ. தாண்டி உள்ளது மணியம்மன் கோயில் மூங்கில் தோப்பு. இங்கிருக்கும் ஆலமரம் ஒன்றின் கிளைகளில் நூற்றுக்கணக்கில் தொங்கிக்கொண்டிருக்கின்றன பழந்தின்னி வெளவால்கள்.

''பழந்தின்னி வெளவால்னு சொல்லிட்டா அன்னைக்கி அது இரையெடுக்காம பட்டினியாக் கெடந்துடும்ங்கறது எங்க ஊரோட நம்பிக்கை. அதனால பழஞ்சூப்பின்னுதான் அதுகளைச் சொல்வோம்'' என்கிறார் அந்த ஏரியாவாசி ஒருவர்.

''பகல் முச்சூடும் இந்தப் பழஞ்சூப்பிகள் மரக்கிளைகள்ல தொங்கிட்டே இருக்கும். இரவு நேரம்தான் அதுகளுக்கு இரை தேடுற பொழுது. நைட்டு ஆறு... ஆறரை மணி வாக்குல கிளம்பிப் பறக்க ஆரம்பிக்கும். ராத்திரி பூரா இரை தின்னுட்டு, அதிகாலை அஞ்சு மணிக்கெல்லாம் கிளம்பின இடத்துக்கே திரும்ப வந்துடும். வானத்துல கருடன் பறந்தா, மத்த ஊர்கள்ல சனங்க எல்லோரும் கன்னத்துல போட்டுக்குவாங்க இல்லியா? அதுபோல எங்க பக்கத்து சனங்க வானத்துல பழஞ்சூப்பிகள் பறந்து போறதைப் பார்த்துக் கன்னத்துல போட்டுக்குவோம்!'' என்றார் கூத்துப்பட்டு கிராமத்தில் வசிக்கும் சரசுவதி.

ஊனத்தூரைச் சுற்றியுள்ள கிராமங்களில் பழஞ்சூப்பிகளை அனைவருமே போற்றிப் பாதுகாத்து வருகின்றனர். இதன் மாமிசக் கறியானது, மனித நோய்கள் சிலவற்றுக்குச் சிறந்த மருந்து என்கிற கருத்தும் பரவலாக உலவி வருகிறது.

''எங்க ஊரு செல்லப் பிள்ளைங்க இதுங்க. தமிழ்நாட்டுல மத்த ஊரு பக்கத்துல எல்லாம் இதுகளை நைட்டு நேரத்துல வலை கட்டிப் பிடிப்பாங்க. சில ஊர்கள்ல மரக்கிளைகள்ல எலந்தை முள்ளுச் செடியை மாட்டி வெச்சுப் பிடிச்சுடுவாங்க. இதுபோல எதுவுமே எங்க ஊரைச் சுத்தி நடக்காமப் பார்த்துக்குவோம். ஊர்க் கட்டுப்பாடு மாதிரி, எங்க பகுதியில இதுகளை நாங்க யாருமே கொல்றது இல்ல. பறவையாவே பறந்து திரிஞ்சு அதுங்களோட காலத்தைக் கழிக்கட்டும்னு விட்டுடுவோம்!'' என்கிறார் முருகன்.

'சுத்த சைவமான இதுங்க பழங்களைத்

# இது வௌவால் கிராமம்!

தவிர வேறு எதையுமே தின்னாது. இலுப்பைத் தோப்புங்க இருக்கற பக்கமா இரை தேடிப் போகும். பழம் தின்னுட்டுச் செரிச்சப்புறம் அதன் கழிவுகளை வாய் வழியே துப்பிடும். குட்டிப் போட்டுப் பாலூட்டுறதுங்க! எங்க ஊர்ல நாற்பது வருசமா தங்கியிருக்குங்க. இங்கிருந்து ஏற்காடு மலை நூறு கி.மீ. தூரம். அதுவரைக்கும் பறந்து போயி பழங்களைத் தின்னுட்டு வரும்.

ஊருக்கு வெளியே காட்டுல, மணியம்மன் கோயில் ஆலமரத்துல அண்டிக் கிடக்கும். கோயில் திருவிழா அன்னைக்கி அங்அன வேட்டு வெச்சா, அதுங்க எல்லாமே ஊருக்குள்ளார முருகன் கோயில் மருத மரத்துக்குப் பறந்து வந்துடும். முருகன் கோயில் திருவிழாவப்ப வேட்டு போட்டா, மணியம்மன் கோயில் ஆல மரத்துக்குப் பறந்துபோய்டும். அப்புறம் பார்த்தோம். கொஞ்ச வருசமாவே தீபாவளியப்ப ஊருக்குள்ளார யாரும் வெடி வெக்கறது இல்ல. அதுகளுக்கு இடைஞ்சல் இல்லாமத்தான் எங்களோட கொண்டாட்டங்களை அமைச்சுக்குவோம்!'' என்றார் கிராம முக்கியஸ்தரான பொன்னுசாமி.

சக மனிதனுக்கே தீங்கு நினைக்கும் ஆட்களுக்கு மத்தியில் பறவைகளுக்காகப் பாசம் பொங்கும் இந்தக் கிராமத்து மக்கள் வித்தியாசமானவர்கள்தான்!

– ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

படங்கள் : ஆ.பெ.செந்தில்குமார்

* பொன்னுசாமி



* சரஸ்வதி



* முருகன்



# தீபாவளி ரிலீஸ்

இந்த தீபாவளிக்கு சத்யராஜ், சூர்யா, தனுஷ் படங்களைத் தவிர, வேறு சில பிரபலங்களின் படங்களும் வரப் போகிறது. அந்தப் படங்களின் டிரெய்லர் உங்கள் பார்வைக்கு...



### கலைஞரின்... சேது காவியம்!

**க**லைஞர் இயக்கி முக்கிய கதாபாத்திரத்தில் நடிக்கும் படம். தவிர, ஏராளமான துணை-இணை கூட்டணி நடிகர்களும் உள்ளனர். 'கடலையும் கடவுளையும் ஒரே நேர்க்கோட்டில் கொண்டு வந்துள்ளோம்' என்கிறது கலைஞர் யூனிட். படத்தில் பிரம்மாண்டமான உண்ணாவிரதக் காட்சி வருகிறதாம்.



இதற்கான அரங்கை ஒரே நாளில் அமைத்தார்களாம். அதைவிட வேகமாக ஒரு மணி நேரத்தில் கலைத்தார்களாம். 'நீதிமன்றமென்ன கொம்பு முளைத்த கட்டடமா? எங்கள் தலைவனை அது தொட்டுடுமா?' என்ற வாலியின் பாடலில் அனல் பறக்குமாம். "படத்தில் கலவரக் காட்சிகள் அதிகம் என்ற செய்தி வெறும் வதந்தி" என்றார் ஒரு துணை நடிகர். இந்தப் படத்துக்கு முழு வரி விலக்கு அளிக்கப்பட்டுள்ளதாம்.

### நேற்று... இன்று... நாளை...

"விளையாட்டை மையமாகக்கொண்ட படம். கங்குலி, டிராவிட், டோனி என மூன்று ஹீரோக்கள். ஒரு காலத்தில் ஹீரோக்களாய் இருப்பவர்கள், பிறகு எப்படி ஜீரோக்களாகிறார்கள் என்பதே கதையின் கரு. படம் ஆரம்பிக்கும்போது கங்குலி ஹீரோ. இடைவேளைக்குப் பின் டிராவிட் ஆதிக்கம். க்ளைமேக்ஸில் டோனி தூள் கிளப்புகிறார். அப்போது டிராவிட் 'நேற்று கங்குலி, இன்று நான், நாளை நீ' என்று மர்மப் புன்னகையுடன் தத்துவம் உதிர்க்க, படம் முடிகிற

தாம். சச்சின் கௌரவ வேடத்தில் வருகிறாராம். கங்குலி மற்றும் டோனிக்குப் பிரபல பாலிவுட் கனவுக் கன்னிகள் ஜோடி களாக வருகிறார்கள். டிராவிட்டுக்கு ஜோடி கிடையாது. படத்தின் புதுமை, வில்லன் களிடம் பத்து அடி வாங்கினால், ஒரு அடி திருப்பித் தருவார்களாம். ''அதற்கே, ரசிகர் களின் கைதட்டல் தியேட்டரை அதிர வைக்கும்'' என்கிறார் ஒரு விநியோகஸ்தர்.



### யாருக்கு நாற்காலி?

'நனதே சிம்மாசனா' என்ற கன்னட திரைப்படத்தின் மொழிபெயர்ப்பு. படத்தின் உண்மையான நாயகன் ஒரு நாற்காலி. அதனைச் சுற்றித்தான் கதை நகருகிறது. நொடிக்கு நொடி சஸ்பென்ஸ். எம்.எல்.ஏ.க்கள் கடத்தல், சிறை வைப்பு, சண்டை என காது கிழிகிறது. தேவகௌடா, குமாரசாமி, எடியூரப்பா போன்ற கன்னட பிரபலங்கள் அசத்தியுள்ள படம். 'ஐந்து நிமிடத்துக்கு ஒரு சண்டைக் காட்சி வருவதால், சண்டைப் பிரியர்களுக்குக் கொண்டாட்டம். அதே சமயம் பெண் கதாபாத்திரங்களே இல்லாததால் படம் ஓடுவது சந்தேகமே' என்கிறார் யூனிட்டைச் சேர்ந்த ஒருவர்.



### மழை!

இது ஒரு ஆர்ட் ஃபிலிம். மழையால் தமிழக மக்கள் எப்படிப் பாதிக்கப்படுகிறார்கள் என்பதைச் சொல்லும் கதை. 'பவர் கட்' ஆவதால், தாய்க்குலங்கள் மெகா சீரியல்களைப் பார்க்க முடியாமல் தவிப்பதையும், வெறிச்சிட்ட சாலைகளில் ஃபிகர்களைப் பார்க்க முடியாமல் இளைஞர்கள் திண்டாடுவதையும் உணர்ச்சிகரமான காட்சிகளால் பதிவு செய்துள்ளார்களாம். படத்தில் எல்லோருமே புதுமுகம். ஒரே தெரிந்த முகம் வானிலை அதிகாரி ரமணன். 'புயல் வரும், இடி இடிக்கும், மழை கொட்டும்' என்ற வசனத்தைத் திரும்பத் திரும்பச் சொல்கிறாராம்!

குசும்புராஜ்

## விழிப்புணர்வுக் கதை - 1

# காதல் போதை

**பா**லா தத்தளித்தான். விஸ்கியோ, பிராந்தியோ, பட்டைச் சாராயமோ எந்தச் சனியனையாவது கொஞ்சம் உள்ளே தள்ளினால்தான் உடல் ஸ்டெடியாகும் போல பரபரத்தது. ஆனால், மனம் காறித் துப்பியது.

'ச்சீ! நீயெல்லாம் மனுஷனா? உனது இந்தப் பழக்கத்தால்தானே, உள்ளே ஒரு ஜீவன் உயிருக்குப் போராடிக் கொண்டிருக்கிறது. இதற்குப் பிறகும்கூட எப்படி உனக்குக் குடிக்க வேண்டும் என்று தோன்றுகிறது?'

பாலா கூனிக் குறுகி மீண்டும் ஆஸ்பத்திரிக்குள் திரும்பி நடந்தான்.

இரவு பன்னிரண்டு மணிக்குமேல் சக்தியின் தோழி சுகன்யா, ''பாலா, சக்தி தூக்க மாத்திரை சாப்பிட்டுட்டா. எனக்கு ரொம்பப் பயமாயிருக்கு. சீக்கிரம் வாங்க'' என்றபோது பக்கத்தில் இருக்கும் இந்த ஆஸ்பத்திரிக்குத்தான் கொண்டுவர முடிந்தது.

சக்திக்கு இரண்டாவது இன்ஜெக்ஷனைப் போட்டுவிட்டு, டாக்டர் தூக்கக் கலக்கத்துடன் பாலாவிடம் சொன்னார்.

''என் சைட்ல எல்லா ட்ரீட்மெண்ட்டும் முடிச்சுட்டேன். ஸ்டமக் வாஷ் பண்ணியாச்சு. பி கேர்ஃபுல்! ஒன் ஹவர் கழிச்சு என்னைக் கூப்பிடுங்க'' என்று சொல்லிவிட்டு நகர்ந்தார்.

உதவி ஆள் மணி, சக்தியிடம் நெருங்கி பூக்துவாலையைத் தண்ணீரில் முக்கி, அவளின் முகத்தில் பளீரெனத் தாக்கினான்.

சக்தி திடுக்கிடலுடன் சடாரென்று கண் திறந்து அலங்க மலங்க விழித்தாள்.

பாலா பதறினான். ''ஏய், என்னப்பா பண்றே?''

''இப்படிப் பண்ணலைன்னா பேஷண்ட் தூங்கிடும் சார். அப்பால கதை கந்தலாயிடும்; தூங்க வுட்டுடாதே'' என்றான்.

''இல்லப்பா; என்னால அவளை அடிக்க முடியாது. ப்ளீஸ் கொஞ்சம் உதவி பண்ணு. நீயே இதைப் பார்த்துக்க.''

பாலா, பாக்கெட்டிலிருந்து ரூபாய் நோட்டுகளை உருவி மணியின் கையில் திணித்தான்.

''சர்தான் சார், நீ வுடு. நான் பார்த்துக்கறேன். நீ வேணும்னா வெளிய போய் உட்கார்ந்துக்கோ.''

**ச**க்தி அன்புமயமானவள்; உலகை மிகவும் நேசித்தவள். அவள் வெறுத்த ஒரே விஷயம் குடிப்பழக்கம்தான்.

''என் அப்பா ஒரு முழு குடிகாரர் பாலா. நல்ல கவர்ன்மெண்ட் ஜாப்ல இருந்தாலும், அவரால வீட்டுக்கு எந்தப் பிரயோஜனமும் இருந்ததில்ல. சம்பாத்தியம் எல்லாத்தையும் குடிச்சே அழிச்சவர். இது தவிர, எப்பவும் அம்மாவை அடிக்கறதும் உதைக்கறதுமா அவர் பண்ணின டார்ச்சர் இருக்கே! அப்பப்பா... எத்தனை நாள் நான் மிரண்டு பதறியிருக்கேன் தெரியுமா?'' சொல்லும் போதே சக்தியின் குரல் விசும்பும்.

''கடைசியில குடிச்சுக் குடிச்சே குடல் வெந்துபோய் அப்பாங்கற ராட்சஷன் ஒரு நாள் செத்தே போய்ட்டாரு. அவர் செத்த போது எனக்கு அழுகையே வரலை

உமா சம்பத்

தெரியுமா? அம்மாவுக்கு ஒரு நரகத்தி லேர்ந்து விடுதலை கிடைச்சதேன்னுதான் சந்தோஷப்பட்டேன். ஆனா, அப்பாவோடு வாழ்ந்த வாழ்க்கை அம்மா மனசுல ஆறாத ரணமா அப்படியே தங்கிடுச்சு. அப்பாவால அம்மா மிரண்டுபோய் பாதி மன நோயாளியா மாறிட்டாங்க. ஏன் பாலா, இந்த ஆம்பளைங்க இப்படி இருக்காங்க? கட்டின பொண்டாட்டி, பிள்ளைகளைவிட குடியில என்னதான் சுகம் இருக்கு?''

சக்தி கலங்கிய கண்களோடு கேட்கும் போது பாலாவுக்குப் பதில் சொல்லத் தெரியவில்லை. அப்போது அவனுக்கு மதுப் பழக்கத்தோடு சகவாசம் இருந்த தில்லை. சக்தியைப் பிரிய நேர்ந்தபோது தான் ஆள் மாறிப் போனான்.

**ச**க்தி, திருவான்மியூரில் செல்ஃபோன் ஸ்பேர் பார்ட்ஸ் தயாரிக்கும் ஒரு கம் பெனியில் வேலை பார்த்து வந்தாள்.



# இடி சிரிப்ஸ்



"அந்தப் பட்டாசு கடையில மாத்திரம் கூட்டம் அதிகமா இருக்கே, ஏன்?"

"வெடிக்காத பட்டாசுக்கு 'புஸ்' வாணம் இனாமா கொடுக்கறாங்களாம்!"

என்.எஸ்.பாலசுப்பிரமணியன்

பயிற்சிக்காக பெங்களூரில் உள்ள தலைமைத் தொழிற்சாலைக்கு அவளை கம்பெனி அனுப்பியதுபோது, பாலா இடிந்தே போனான்.

''வேண்டாம்னு சொல்லிடு சக்தி. நீ இங்கேயிருக்கும்போதே உன்னை ஒரு நாள் பார்க்கலைன்னாலும் மனசு தவிச்சுப் போயிடுது. ஒரு வருஷம் உன்னைப் பார்க்காம நான் எப்படி இருப்பேன்? போகாதே ப்ளீஸ்!'' பரிதாபமாகக் கெஞ்சினான் பாலா.

''ச்சீ... என்னப்பா இது! ஏன் இப்படிக் கன்னாபின்னான்னு பினாத்துற?'' சொல்லமாகக் கடிந்தபடி அவன் தலை முடியைக் கோதிவிட்டாள்.

''சக்தி, உனக்கே தெரியும். அம்மா, அப்பா யாருன்னே தெரியாத அனாதை நான். என் மேல அன்பு காட்டவோ, பாசம் செலுத்தவோ யாருமில்லாம எப்படி ஏங்கியிருக்கேன் தெரியுமா? கடவுளோட கருணையால ஒரு தேவதை போல நீ எனக்குக் கிடைச்சே. இப்ப திடீர்னு என்னை விட்டுப் போறேன்னு சொன்னா, என் நிலைமையை நினைச்சுப் பார்த்தியா?''

சக்திக்கு பாலாவைப் பார்க்கவே பாவமாக இருந்தது.

சக்தி கெஞ்சலும் கொஞ்சலுமாக பாலாவிடம் பேசினாள்.

''பாலா ப்ளீஸ்பா... நான் சொல்றதைப் புரிஞ்சுக்க. இதுமாதிரி ஒரு நல்ல சான்ஸ் மறுபடி கிடைக்கவே கிடைக்காது. ஒரு வருஷம் ட்ரெயினிங் போயிட்டு வந்தா சம்பளம் ரெண்டு மடங்காயிடும். ஒரு வருஷம்ங்கிறது நொடியில ஓடிப் போயிடும்பா. என்ன ஓ.கே.வா?'' பேசிப் பேசியே சம்மதம் பெற்றுக்கொண்டு கிளம்பிப் போனாள்.

பாலாவைத் தனிமை ஓடோடி வந்து பிடித்து கொண்டது. ஆரம்பத்தில் இரண்டு மூன்று மாதங்கள் லீவு கிடைத்தபோதெல்லாம், பெங்களுக்குப் போய் சக்தியைப் பார்த்துவிட்டு வந்தவனை, அடிக்கடி வந்து வீண் செலவு செய்யக்கூடாது என்று சொல்லிவிட்டாள் சக்தி. ஃபோனில் என்ன பெரிதாகப் பேசிவிட முடியும்? பாலாவுக்கு வாழ்க்கையே வெறுப்பாக இருந்தது.

சக்தியின் முகத்தைப் பார்க்காமல் உலகமே இருண்டுபோனது போல ஆகிப் போனது. போதைப் பழக்கம் சுலபமாகப் பிடித்துக்கொண்டது.

ஆயுத பூஜையன்று கம்பெனி நண்பர்கள் பாலாவை வலுக்கட்டாயமாகத் தங்களின் டிரிங்ஸ் பார்ட்டிக்குக் கூட்டிக்கொண்டு போக, அன்றைக்கு முதல்முறையாகத் தொண்டைக்குள் விஸ்கியை ஊற்றினான்.

பிறகு என்ன? ஒரு சராசரி குடிமகனுக்குண்டான அத்தனை மோசமான லட்சணங்களும் குடிகொண்டவனானான்.

'தன்னுடைய பாலா குடிகாரனாகிவிட்டானா?' சக்தியால் இதை நம்பவே முடியவில்லை. ஃபோனில் அவளுடைய தோழி சொன்னதுமே, லீவ் போட்டுவிட்டுப் புறப்பட்டு வந்தவள், பாலாவைப் பார்த்தபோது அதிர்ந்தே போனாள்.

ஒரு வருஷப் பிரிவுக்குள்ளாகவே பாலா சிதைந்து சின்னாபின்னமாகிப் போயிருந்தான்.

சக்தி அழுகையும் ஆத்திரமுமாகக் கொந்தளித்தாள்.

''ஏன் பாலா இப்படி ஆனீங்க? சொல்லுங்க, குடிப்பழக்கத்தை நான் அடியோட வெறுத்தேன்னு தெரியுமில்லே. தெரிஞ்சும் குடிக்கிறீங்கன்னா நீங்க என்னை உண்மையா காதலிக்கலே; அப்படித்தானே

சொல்லுங்க பாலா'' - தொண்டை நரம்புப் புடைக்கக் கத்தினாள்.

பாலா குற்ற உணர்வுடன் தலை குனிந்த படி பேசினான்.

''தப்புதான் சக்தி, நீ கிட்டே இல்லாத சோகத்துல தப்புப் பண்ணிட்டேன். என்னை மன்னிச்சுடு சக்தி. இதுக்காக என்னை வெறுத்துடாதே. அதை மட்டும் என்னால தாங்கிக்கவே முடியாது. இனிமே குடிக்கவே மாட்டேன்.''

சக்தியின் உள்ளங்கைகளுக்குள் முகத்தைப் புதைத்துக்கொண்டு பாலா அழுதான்.

''உன்னை நம்பறேன் பாலா. ப்ளீஸ்... இனிமே குடியை நினைச்சுக்கூடப் பார்க்காதீங்க. குடிப்பழக்கம் மான-அவமானத்தை மறக்கடிச்சுடும். தராதரம் பார்க்காம கண்டவங்ககிட்டேயும் கையேந்த வைக்கும். பெண்டாட்டி குடிக்கப் பணம் தரலேன்னு கோபப்பட்டு, அவளை மண்ணெண்ணெய் ஊத்திக் கொளுத்தின குடிகாரனை நான் பார்த்திருக்கேன். வேண்டாம் பாலா, இனிமேல் மனசாலேயும் இந்தக் குடிப்பழக்கத்தை நினைக்காதீங்க. உங்களுக்காகவே நான் சீக்கிரம் திரும்பி வந்திடறேன்; ஓ.கே.வா?''

அந்தச் சமயத்தில் சரி, சரியென்று தலையாட்டிய பாலாவால், தொடர்ந்து சக்திக்குக் கொடுத்த வாக்கைக் காப்பாற்ற முடியவில்லை.

வழக்கம்போல இன்றும் பெங்களூரிலிருந்து சென்னை வந்து அவனைச் சந்தித்துப் பேசிவிட்டு சக்தி கிளம்பிய கையோடு, டாஸ்மாக் கடைக்குத்தான் போய்ச் சேர்ந்தான் பாலா.

**எ**ல்லாம் வாங்கிக் கொண்டு அறைக்குத் திரும்பி, தன் முதல் பெக்கை அடித்துவிட்டு நிமிர்ந்தபோது, பாலா திக்கென்று அதிர்ந்து போனான். அறை வாசலில் திகைத்துப் போய் நின்றிருந்தாள் சக்தி.

''ச...சக்தி. எ...என்ன? எதுக்காக திரும்ப வந்தே?'' தட்டுத் தடுமாறினான் பாலா.

''என்னோட செல்ஃபோனை உங்க பேக்ல வெச்சுட்டேன். அதை வாங்கிட்டுப் போகத்தான் வந்தேன். உங்களைப் போய் நல்லவன்னு நினைச்சுக் காதலிச்சுத் தொலைச்சேனே, என் புத்தியைச் சொல்லணும்.''

'படீர்... படீர்' என்று தலையில் தன்னைத்தானே அறைந்துகொண்டு அழுதாள் சக்தி.

''ஏய்! என்ன வாசல்ல நின்னுக்கிட்டு டிராமா பண்றே. முதல்ல உள்ளே வா'' கோபத்துடன் சக்தியைப் பிடித்து வேகமாக அறைக்குள் இழுத்தான். சடாரென்று உள்ளே வந்து விழுந்தாள் சக்தி.

எழுந்தவள் மேலும் ஆங்காரத்துடன் கத்தினாள்.

''உங்களை மாதிரி குடிகாரனை நம்பி ரூமுக்குள்ளே வரக்கூட முடியாது. முதல்ல விடுங்க என்னை.''

''ஏன்? இதுவரைக்கும் நான் எப்பவாவது உன்கிட்டே எல்லை மீறி மோசமா நடந்திருக்கேனா?''

''சுயநினைவிலே இருக்கறது வேற. ஒரு குடிகாரன் போதையில என்ன செய்வான்னு யாருக்குத் தெரியும்!''

பாலாவுக்குச் சுறுசுறுவென்று கோபம் தலைக்கேறியது.

''சக்தி, பேசறதுக்கு ஒரு அளவு இருக்கு.

## ஹாஸ் கவிதை




சாறு பிழிந்த பின்
இங்கேதான்
குவிக்கப்படுகின்றன
சக்கைகள்

-பா.ராஜா

**சக்தியின் கண்கள் கலங்கித் தத்தளித்தன. கண்களாலேயே பாலாவை 'வா'வென்று அழைத்தாள்**



நீ மேலமேல என்னை அவமானப்படுத் தறே.''

பாலாவின் குரலில் கடுமையை உணர்ந்த சக்தி, நிறுத்தி நிதானமாகக் கேட்டாள்.

''பாலா கடைசியா கேட்கறேன். உங்களால இந்தக் குடிப்பழக்கத்தை விட முடியுமா, முடியாதா? சொல்லுங்க, திருந்துவீங்களா? நம்பலாமா? சத்தியம் பண்ணுங்க!''

கையும் களவுமாக மாட்டிய குற்ற உணர்வு, பாலாவைக் கொதிப்படையச் செய்தது. சிறிதும் யோசிக்காமல் அவன் நாவு தன்னிச்சையாக வார்த்தைகளை இறைத்தது.

''ஆமா! நான் திருந்த முடியாத குடிகாரன்தான். இதை நீயும் புரிஞ்சுக்கிட்டே இல்ல? போ... போய் உனக்குப் பொருத்தமான, எந்தக் கெட்ட பழக்கமும் இல்லாத ஒருத்தனைக் கல்யாணம் பண்ணிக்கிட்டுச் சந்தோஷமா இரு. போ... போடி!'' பல்லைக் கடித்துக்கொண்டு கத்தினான் பாலா.

இதுநாள் வரை தன்னிடம் அதிர்ந்துகூட பேசாதவனா இப்படிச் சீறுகிறான்! சக்தி விருட்டென்று திரும்பி வெளியேறினாள்.

அதற்குப் பின்புதான் இந்தத் தற்கொலை முயற்சி.

**ந**ல்ல காலம்! சக்தி பிழைத்துகொண்டாள். ஆனால், ரெண்டு நாள் ரெஸ்ட் எடுக்க வேண்டுமென்று டாக்டர் சொல்லி விட்டார்.

பாலா, தினமும் சக்தியின் அறைக்குப் போவான். பழங்கள், பிஸ்கெட் என்று தான் வாங்கிச் செல்வதையெல்லாம் சக்தியின் தோழி சுகன்யாவிடம் தந்துவிட்டு, சில நிமிடங்கள் வெளியிலிருந்தபடியே சக்தியைப் பார்த்துவிட்டுத் திரும்பிவிடுவான்.

சக்தியிடம் ஒரு வார்த்தை பேசவும் அவனுக்குத் தைரியமில்லை.

சக்தி மிகவும் தைரியசாலி. ஆனால், இந்த வாழ்க்கையே வேண்டாம் என்று தற்கொலைக்கு முயன்றாள் என்றால், என் மீது எத்தனை அன்பு வைத்திருக்க வேண்டும். ஓர் உயிரையே பறிக்கும் அளவுக்கு என்னைக் கொடூரனாக்கியது குடிப்பழக்கம்தானே?

**மூ**ன்றாம் நாள், சக்தியின் அறைக்குச் சென்றபோது அவளுடைய தோழி இல்லை. கட்டிலில் படுத்திருந்த சக்தி இவனைத் திரும்பிப் பார்த்தாள். அவளுடைய கண்கள் கலங்கித் தத்தளித்தன. கண்களாலேயே இவனை 'வா'வென்று உள்ளே அழைத்தாள்.

பாலாவுக்குக் கண்கள் கலங்கின; உதடுகள் துடித்தன.

''நான் மூணு நாளா ஒரு ட்ராப்கூடக் குடிக்கலை சக்தி'' தழுதழுப்புடன் சொன்னான்.

''வெரிகுட்! இப்பத்தான் குட்பாய்!'' - மெல்ல புன்முறுவல் செய்தாள் சக்தி.

''ஏன் சக்தி, இப்படி ஒரு தப்பான முடிவெடுத்தே?''

''போதைதாம்பா! உனக்கு மது போதை. எனக்குக் காதல் போதை. ஆனா, எனக்கு உன்னோட காதல் போதையிலேர்ந்து மீள விருப்பமில்லை. அதுதான் அப்படிப் பண்ணிட்டேன். பயங்கரமா அழுது ஆர்ப்பாட்டம் பண்ணிட்டியாமே! சுகன்யா சொன்னா'' என்றபடி பாலாவை இழுத்துத் தன் மடியில் சாய்த்துக்கொண்டாள்.

பாலா மீது மது வாசம் துளிக்கூட இல்லை.

''ஸாரி சக்தி... நான் அப்படிப் பேசியிருக்கக் கூடாது. என்னை மன்னி...''

மேலும் பேச பாலாவின் உதடுகள் அவன் வசத்தில் இல்லை. அவை சக்தியின் இதழ்கள் தந்த போதையில் சொக்கித் திணறின. ●

# JAI TOURS

எண்.5, முதல் மெயின் ரோடு, அரும்பாக்கம், சென்னை-106.
Ph: 044 - 24756202, 6534 0725, 93805 37352

**அன்புடன் வரவேற்கிறோம்!**

நீங்கள் சுற்றுலா பிரியரா? செல்லுமிடத்தில் சரியான வாகனம் கிடைக்குமா? நல்ல உணவு கிடைக்குமா? தங்குமிடம் சரியாய் அமையுமா? என்கிற 'கவலைகளை' மறந்து சுற்றுலாவை முழுமையாக அனுபவிக்க வேண்டுமென எண்ணுபவர்களா?

கவலையை எங்களிடம் கொடுங்கள் சுற்றுலாவை சுகமாக அனுபவியுங்கள்! இந்தியாவின் எந்த மூலைக்குச் செல்வதாக இருந்தாலும் வாகனம், தங்குமிடம், உணவு ஆகியவற்றுக்கு நாங்கள் பொறுப்பு.

தேனிலவு தம்பதினருக்கு தனிச் சுற்றுலாவும் உண்டு.

மாணவர்களுக்கு தனிச் சுற்றுலா மற்றும் பேருந்து ஏற்பாடுகள் செய்து தரப்படும்!

**ஒரு நாள் சுற்றுலா**

| | | |
|---|---|---|
| Nov - 20, 27<br>Dec - 04, 11 | Rs. 375/- | **தங்கக் கோயில்** நாராயிணி வேலூர், திருவலம், ரத்தனகிரி, ஜலகண்டேஸ்வரர். |
| Nov - 11 | Rs. 350/- | **கந்தசஷ்டி** *திருத்தணி*, பாகசாலை, வள்ளி மலை (அ) நெடியமலை |
| **பிரதோஷம் – மாதத்தில் பிரதி பிரதோஷம் ( 2pm - 7pm )** | | |
| Nov - 26 | Rs. 390/- | **தீபம் ஸ்பெஷல் கிரிவலம் :** (அண்ணாமலையார், உண்ணாமலையாருடன் கிரிவலம்) |
| Dec - 23 முதல்<br>Dec - 29 வரை | Rs. 390/- | ('Acc, Bus + Train) பத்ரஜாலம் பர்ணசாலா, பஞ்சராம க்ஷேத்திரம், ஹைதராபாத், அதிலாபாத், பாசார் இன்னும் சில கோயில்கள் |
| Dec - 20 | Rs. 350/- | **வைகுண்ட ஏகாதேசி** பெருமாள் தரிசனம் |



**வேத சாஸ்திர ரக்ஷணத்திற்கு ஓர் வேண்டுகோள்.**

*அத்வைத வித்யாசார்ய மஹாராஜா ஸாஹேப்*
*ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்யஸ்மரண ஸமிதி* (Regd.)
**"ஸ்ரீ கோவிந்த தீக்ஷித கடிகாஸ்தானம்"**
29-30, East Iyen Street, KUMBAKONAM, Thanjavur Dt. Tamil Nadu -612 001. India.
E-mail : vedagdps@sancharnet.in Website : www.rajapatasala.in

☎ Off : (0435) 2425948 2401789
Fax : 2425948
Patasala : 2401788 2422866

"வேதாத்யயனம் செய்யும் பாக்யமில்லாதவர்கள், வேதாத்யயனம் செய்துவரும் குழந்தைகளை போஷித்து ரக்ஷிப்பதன் மூலம் ஓரளவாவது தனது கடமையை நிறைவேற்ற முடியும். ஒரு வேதக் குழந்தையின் படிப்பு பராமரிப்பு செலவை ஒரு குடும்பம் எடுத்துக்கொண்டால், பேருபகாரமாக இருக்கும்" என்று காஞ்சி ஸ்ரீ மஹாஸ்வாமிகள் உபதேசித்துள்ளார்கள். அவரின் மூதாதையர்களான ஸ்ரீ நாகமாம்பா ஸமேத பகவான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களால் கி.பி. 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து 465 ஆண்டுகளாக நடந்துவரும் ராஜா வேத காவ்ய பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாய்போல் இயங்கி காப்பாற்றி வருகிறது. தற்பொழுது 200 மாணவர்களுக்கு 17 வேத, சாஸ்திர அத்யாபகர்கள் புராதனமான குருகுல முறைப்படி ரிக் வேதம், கிருஷ்ண, சுக்ல யஜுர் வேதம், ஸாம வேதத்தை போதித்து வருகிறார்கள். இப்புனித பாடசாலையை ரக்ஷிக்க கீழ்கண்ட திட்டங்களில் அனைவரும் பங்குகொண்டு ஸ்ரீ வேத மாதாவின் அனுக்ரஹத்தால் ஸகல ஸ்ரேயஸ்களையும் அடைய வேண்டுகிறோம். புதிய பாடசாலை கட்டிடம் **ஸ்ரீ கோவிந்த தீக்ஷித கடிகா ஸ்தானம்** என பெயரிடப்பட்டு 21-6-2004 திங்கள்கிழமை ஸ்ரீ காஞ்சி காமகோடி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் திறந்து வைத்து வேத அபிவிருத்திக்கு அர்ப்பணித்தார்.

| தங்கள் நன்கொடைக்கு U/S 80-G பிரிவின்படி வருமான வரி விலக்கு உண்டு<br>நன்கொடை திட்ட விபரங்கள் | நன்கொடை தொகை | நிரந்தர வைப்பு நிதி "Corpus Fund" |
|---|---|---|
| ஒரு வேளை ஸமாராதனைக்கு (பகுதி தொகை) | Rs. 500 | Rs. 8,000 |
| அமாவாஸ்யை (or) பௌர்ணமி (or) க்ருஷ்ண (or) சுக்ல பக்ஷ த்வாதசி ஒரு ஸமாராதனைக்கு [Please choose one specific day of a particular month in a year for Samaradhana] | Rs. 1,500 | Rs. 25,000 |
| வேதம் பயிலும் ஒரு மாணவனின் பராமரிப்பு ஒரு மாத செலவு ரூ.1000/- | Rs. 12,000 P.A | Rs. 2 Lakhs |

நன்கொடைக்கான தொகையை Cross செய்யப்பட்ட D.D./ Cheque-ஐ A.V.M.S.G.D.P.S. Samithi என்ற பெயரில் அனுப்பக் கோருகிறோம்.

Mar-2007



''மன்னர் இரவு தூக்கத்தில் கட்டிலிலிருந்து கீழே அலறிக் கிட்டு விழுந்துட்டாராமே, ஏன்?''

''எதிரி நாட்டு மன்னனோடு போர் செய்வதுபோல் கனவு கண்டாராம்!''

- இனாம் மணியாச்சி
ச.ஆ.கேசவன்

''சார், தீபாவளி வருது. வீட்டில் எல்லோரும் சேர்ந்து கொண்டாடணும். பெரிய மாப் பிள்ளை சேலத்தில் இருக்கிறார்; சின்ன மாப்பிள்ளை கோவையில் இருக்கிறார்; என் வீட்டுக்காரர் சென்னையில் இருக்கிறார்.''

''கவலைப்படாதீங்கம்மா. நான் எல் லோருக்கும் ஜாமீன் எடுத்துத் தந்துடு றேன்.''

- கே.என்.சுப்பிரமண்யன்



# ஜாமீன் தீபாவளி!



''மருந்து மாத்திரைகளைச் சாப்பிடத் தராமல், அதுக பெயர்களை என் காதில் விழுற மாதிரி சத்தம் போட்டுச் சொல்லிட்டுப் போறீங்களே... ஏன்?''

''நீங்க கொடுத்த கன்சல்டிங் ஃபீஸுக்கு இவ்வளவுதான் செய்ய முடியும்...!''

- ஜீ.வினோத்



"என்ன புலவரே... ஏற்கெனவே என்னைப் புகழ்ந்து பாடிய அதே பாடலை மீண்டும் பாடுகிறீர்கள்...?"

"இது ரீமிக்ஸ் மன்னா!"

- சி.சந்தோஷ்குமார்



"கபாலிகிட்ட மதச்சார்பின்மையப் பார்த்தேன்யா!"

"எப்படிச் சொல்றீங்க?"

"எல்லாக் கோயில்லயும் திருடு றானே!"

- அம்பை தேவா



"பிச்சைக்காரனுக்குத் தீபாவளிப் பலகாரம் போட்டது தப்பாப் போச்சு."

"என்னாச்சு?"

"நான் அவனைக் கொல்லப் பார்த்தேன்'னு என் மீது கொலை முயற்சி வழக்குப் போட்டிருக் கிறான்!"

- எம்.அசோக்ராஜா



"மேடம், உங்களுக்குக் கல்யாணமானதையே மறச் சுட்டீங்களே..?"

"அதையாவது மறைச்சே னேன்னு சந்தோஷப்படுங்க!"

- மு.செந்தில்குமார்



**கா**லை 9:00 மணி. வழக்கம்போல பரபரப்புடன் அலுவலகத்தில் நுழைந்தேன்.

''வந்துட்டாண்டா லேட் ராமலிங்கம். எல்லாரும் வழிய விடுங்கடா'' என்றான் மணிகண்டன்.

''எப்படிடா... மேனேஜர் எவ்வளவு திட்டினாலும் இவன் மட்டும் எல்லாத்தையும் தட்டிவிட்டுட்டு லேட்டாவே வர்றான்?'' என்று சிண்டலுக்கு விதை தூவினான் பாபு.

''அவனை மேனேஜர் திட்டுறது எல்லாம் சகஜம்டா. அவன் வேண்டாம்னு நெனச்சிருந்தார்னா எப்பவோ வேலையை விட்டுத் துரத்தியிருப்பாரே...'' இவ்வளவு பாராட்டு(?!)களையும் வாங்கிக்கொண்டே பணியைத் துவங்கினேன்.

''ராமலிங்கம், உன்னோட ஃபேவரிட் கிரான்மா பார்வதிக்கு யு.எஸ்.லேர்ந்து பார்சல் வந்திருக்கு. சீக்கிரம் கிளம்பு. நீ வேற எங்கயாவது போய்ட்டீன்னா எங்கபாடு திண்டாட்டமாப் போயிடும்'' என்று அவசரப்படுத்தினார், டிஸ்பாட்ச் க்ளர்க்.

இன்று டெலிவரி கொடுக்க வேண்டிய கவர்கள், பார்சல்களை வாரி பைக்குள் போட்டுக்கொண்டு கிளம்பினேன். தி.நகர் வாணிமகால் துவங்கி, பாண்டிபஜார் முடித்து, கடைசியாக போக் ரோடு செல்வதற்குள் பகல் 3:00 மணியாகிவிடும், சரியாக இருக்கும்; பார்வதியம்மாள் வீட்டுக்குப் போய் டெலிவரி கொடுத்து விடலாம்.

**எ**ங்கள் ராம் & ராம் கூரியர் நிறுவனத்தில் பணிபுரியும் யாருமே, பார்வதியம்மாள் வீட்டுக்கு மட்டும் டெலிவரி எடுத்துச் செல்ல மாட்டார்கள்.

''சார், உற்சாகமான நேரமாச்சேன்னு

# 30%

# சா. ஜெயராஜ்

காலையில போனா, 'காலங்காத்தால வந்துட்டீங்களா?'ன்னு கேட்கறாங்க. சரி, கொஞ்சம் தாமதப்படுத்திப் போனா, 'ஏம்ப்பா, இந்த வெயில் நேரத்துல என்னைத் தொந்தரவு பண்றீங்க?'ன்னு கடிக்கறாங்க'' என்றான் ரமேஷ்.

''நான் ஒருநாள் சாயங்காலம் நாலு மணிக்குப் போனேன். கதவைத் திறந்தவங்க, 'நல்ல தூக்கத்தைக் கெடுக்கறீங்களேப்பா'ன்னு புலம்பினாங்க'' என்றான் பாபு.

''க்ளாஸ் டீச்சருக்குப் பயந்து 'கட்' அடிச்சே பத்தாவது ஃபெயிலானவண்டா நான். இங்க வந்தா இப்படியொரு வேதனை ராணி. ம்... என்னதான் பண்றதோ...''

இப்படித்தான் அந்த வீட்டு டெலிவரி பொறுப்பு எனக்கு வந்து சேர்ந்தது.

# புன்னகை!



**பா**ர்வதி அம்மாள் வீடு போக் ரோடு, பதினேழாம் நம்பர். மூன்று கிரவுண்டு மனையில் இரண்டு கிரவுண்டு அளவுக்கு பங்களா. அதில் ஹால் மட்டுமே டென்னிஸ் கிரவுண்டு போல பிரமாண்டமானது. ஒரே மகன், யு.எஸ்.சில் பணிபுரிகிறார். கணவர் அண்மையில்தான் காலமானார். பார்வதியம்மாள் கொஞ்சம் கோபக்காரர்தான். காலையில் துவங்கி மாலை வரை வீட்டு வேலையாட்களுக்குத் திட்டு விழும். மாலை ஆறு மணியிலிருந்து தூங்கச் செல்லும் பதினொரு மணி வரை திட்டு வாங்குகிற பொறுப்பு இரவுக் காவலாளிக்கு. இவையெல்லாம் அந்தப் புண்ணியவான் அவிழ்த்துவிட்ட தகவல்தான்!

பகலில் அவ்வப்போது பத்திரிகை படிப்பார்; டி.வி. பார்ப்பார். அதுவும் போகோ சேனல்தான்.

ஆகாய விமானம் செல்லும் ஓசை கேட்டால், மொட்டை மாடிக்குச் சென்று விமானத்தைப் பார்த்துப் புன்னகைப்பார். அது வெள்ளரிக்காய் அளவு, கோவைக்காய் அளவு, பாதாம் பருப்பு அளவு, காராமணி அளவு, வெந்தயம் அளவு எனக் காட்சியளித்து, கண் பார்வையிலிருந்து மறைந்ததும் விறுவிறுவென்று இறங்கி வந்து, பூஜையறைக்குச் சென்று பேரக் குழந்தைகளின் படங்களைப் பார்ப்பார்.

நான் முதன்முறையாக டெலிவரிக்காக அவர் வீட்டுக்குச் சென்றிருந்தபோது...

''தம்பி, என்ன இது? கவர் இப்படி கிழிஞ்சிருக்கே... இதுதான் நீங்க வேலை செய்யற லட்சணமா?'' என்று ஆவேசமாகக் கத்தினார்.

**இ**ன்னொரு சமயம் என்னைப் பார்த்தும் பொருட்படுத்தாமல் திடுதிடுவென்று ஓடினார் - தொலைபேசியை நோக்கி.

வெளியே எடுத்து வைக்கப்பட்டிருந்த ரிசீவரைக் காதருகே பிடித்துக்கொண்டார்.

''ம்... சொல்லுடா... முருக்கு.''

''........''

''ஒண்ணுமில்லே. கூரியர் பாய்!''

''........''

''உன் பேரைச் சொல்லிக் கூப்பிட்டா உன் மரியாதையே போயிடுமா? முருகன்ற பேரைச் சுருக்கித்தானடா கூப்பிடுறேன்...''

''...........''

''தாத்தா பேரைச் சொல்றியா... சில நேரத்துல அவரையே பேரைச் சொல்லிக் கூப்பிட்டிருக்கேனே... அங்க எப்படியோ? ஆனா இங்க காத்து 'உஸ் உஸ்'ன்னு அடிக் குது. அதனால எனக்கு ஏதாவது ஆயிடு முன்னு நெனக்காத. நிச்சயமா, உனக்குக் கல்யாணம் பண்ணி வெச்சிட்டுத்தான்...''

''..........''

''அதெல்லாம் நடக்குறதுதானடா... வந்தவங்க எல்லாம் போய்த்தானே ஆகணும்? சரி சரி.. நேர்ல வா, பேசலாம்'' என்று ஃபோனை வைத்துவிட்டு வந்தார்.

''சாரி தம்பி, ரொம்ப நேரம் உன்னைக் காக்க வெச்சுட்டேன்...'' என்றவர், ப்ரூஃப் அஃப் டெலிவரியில் கையெழுத்திட்டு, கவரை வாங்கிக்கொண்டார். அதன் பிறகு நான் போகும்போதெல்லாம் ரொம்பக் கெடுபிடி இருக்காது. அதற்காக ஒரேடி யாய் அன்பைப் பொழியவும் மாட்டார். ஒரு 30% புன்னகை தவழும். என்னைத் தொடர்ந்து அவர் வீட்டுக்கு அனுப்ப அலு வலகத்துக்கு அது போதுமானதாயிருந்தது.

இதே இப்போது மீண்டும் ஒரு முறை அவர் வீட்டுக்குச் செல்கிறேன். கதவு திறந்திருந்தது. உள்ளே ஹாலைப் பார்த் ததும் அதிர்ந்து நின்றேன். பார்வதி அம்மாள் நெற்றி வியர்வை தரையில் விழ, கூடத்துத் தரையைத் தண்ணீர்விட்டுத் துடைத்துக் கொண்டிருந்தார்.

''மேடம்...''

''வாப்பா, தம்பி...'' - முகத்தில் வியர் வையுடன் மகிழ்ச்சியும் கலந்து காட்சி யளித்தது. வியர்வையைத் துடைத்தார்; மகிழ்ச்சி மறையவில்லை.

'என்ன... திடீரென்று இத்தனை கனிவு!'

நான் நினைத்ததைப் புரிந்து கொண் டார் போலும்!

''தம்பி, இன்னிக்கு என் பேரன் வெளி நாட்டுலேர்ந்து வர்றான். அவனுக்குத்தான் இந்த வரவேற்பு! இனிமே உங்க கூரியர் பி.ஓ.டி.யில் கையெழுத்துப் போடுற பொறுப்புகூட என் பேரனுக்குத்தான்! இங்க பிறந்து, இங்க படிச்ச என் பையன் அமெரிக்காவுக்குப் போனான். அங்க பிறந்து, அங்கேயே படிச்ச என் பேரன் இங்க வர்றான். இங்கேயே பிஸினஸ் பண்ணப் போறானாம்! இனிமே, இந்தி யாவுலருந்து என் பேரன் பண்ணுற ஃபோனுக்காக, அங்க அமெரிக்காவுல அவன் அப்பன் காத்திருக்கப்போறான்...'' என்றாள் பார்வதியம்மாள்.

அப்போது அவரது முகத்தில் மகிழ்ச்சி ததும்பி வழிந்தது. அது பேரனின் வருகையினாலா, மகனையும், பேரனையும் பிரிப்பதனாலா? ●



**அவரைக் கட்சியில இருந்து ஏன் நீக்குனாங்க?**

**கட்சியை வளர்க்க உரம், பூச்சி மருந்து வாங்கினதா கணக்குக் காண்பிச்சாராம்!**

-மு. செந்தில்குமார்

**இடி சிரிப்ஸ்**

# வளமான வாழ்க்கைப் பயணத்தை துவக்க உன்னத நாள், இன்று.



**மூன்று தலைமுறைகளின் வளமான வாழ்வுக்கு வழிகாட்டி.** ஸ்ரீராம் நிறுவனங்கள் லட்சக்கணக்கான குடும்பங்களின் வளமைக்கும், மகிழ்ச்சியான வாழ்வுக்கும் வழி காட்டி வருகின்றன.

**ஸ்ரீராம் திட்டங்கள்:** சீட்டுத் திட்டங்கள், கார் மற்றும் இருசக்கர வாகனங்கள் வாங்க கடன், 0% வட்டியில் நுகர்வோர் கடன், தனிநபர் கடன், இன்சூரன்ஸ் திட்டங்கள், பங்கு வர்த்தகம், மியூச்சுவல் ஃபண்ட்ஸ், வைப்பு நிதி மற்றும் பல.

**வசீகர பரிசுகள்:** இன்றே ஸ்ரீராம் நிதிச்சேவைத் திட்டங்களில் சேர்ந்து, அதன் அடிப்படையில் வழங்கப்படும் வணிகப் புள்ளிகளுக்கு ஏற்ப பிளாஸ்டிக் பாத்திரங்கள் முதல் 16 கிராம் தங்க செயின் வரை பரிசாக பெறுங்கள். நண்பர்கள் மற்றும் குடும்பத்தினரையும் ஸ்ரீராம் திட்டங்களில் அறிமுகப்படுத்தி, அவர்களையும் வளமான பாதைக்கு அழைத்துச் செல்லுங்கள்.

**முதலடி எடுத்து வையுங்கள் இன்றே.** உங்கள் அருகிலுள்ள ஸ்ரீராம் சிட்ஸ் கிளைக்கு வாருங்கள் இன்றே. மூன்று தலைமுறைகளாக வளமைக்கு வழிகாட்டிவரும் ஸ்ரீராம் நிறுவனங்களில் உங்களுக்கு ஏற்ற நிதித் திட்டத்தில் சேர்ந்து, உங்கள் குடும்பத்தின் வளமான வாழ்வில் முதலடி எடுத்து வையுங்கள்.



**வளமான பாதைக்கு வழிகாட்டும் சீட்டுத் திட்டங்கள்**

| சீட்டுத் திட்டங்கள் | | | சீட்டு மதிப்பு |
|---|---|---|---|
| ரூ.625 | X | 40 மாதங்கள் | ரூ.25,000 |
| ரூ.500 | X | 60 மாதங்கள் | ரூ.30,000 |
| ரூ.1,000 | X | 30 மாதங்கள் | ரூ.30,000 |
| ரூ.1,000 | X | 50 மாதங்கள் | ரூ.50,000 |
| ரூ.1,250 | X | 40 மாதங்கள் | ரூ.50,000 |
| ரூ.2,500 | X | 30 மாதங்கள் | ரூ.75,000 |
| ரூ.2,500 | X | 40 மாதங்கள் | ரூ.1,00,000 |
| ரூ.5,000 | X | 30 மாதங்கள் | ரூ.1,50,000 |
| ரூ.5,000 | X | 40 மாதங்கள் | ரூ.2,00,000 |
| ரூ.6,000 | X | 50 மாதங்கள் | ரூ.3,00,000 |
| ரூ.10,000 | X | 30 மாதங்கள் | ரூ.3,00,000 |
| ரூ.12,500 | X | 40 மாதங்கள் | ரூ.5,00,000 |

* நுழைவுக் கட்டணம் தனி * முன் அனுமதி பெறப்பட்டது

**ஸ்ரீராம் திட்டங்களில் இணைவோர்க்கு வழங்கப்படும் புள்ளிகள்**

| வணிகம் | மதிப்பு | புள்ளிகள் |
|---|---|---|
| சீட்டுத் திட்டம் | ரூ.25,000 | 5 |
| டெபாசிட் | ரூ.25,000 | 5 |
| லைஃப் இன்சூரன்ஸ்: | | |
| ரெகுலர் பிரீமியம் | ரூ.5,000 | 5 |
| சிங்கிள் பிரீமியம் | ரூ.25,000 | 5 |

**வசீகர பரிசுகள்!** விஜயதசமி 2007 நவம்பர் 8 வரை





16 கிராம் தங்க செயின் 2,000 புள்ளிகள்

12 கிராம் தங்க செயின் 1,500 புள்ளிகள்

8 கிராம் தங்க நாணயம் 1,000 புள்ளிகள்

6 கிராம் தங்க நாணயம் 750 புள்ளிகள்



போர்ட்டபிள் டிவி 500 புள்ளிகள்



[illegible] 400 புள்ளிகள்



மைக்ரோவேவ் ஓவன் 300 புள்ளிகள்



மிக்ஸி 200 புள்ளிகள்



டேபிள் ஃபேன் 150 புள்ளிகள்



பட்டுப்புடவை 100 புள்ளிகள்



சிங்கிள் பர்னர் கேஸ் ஸ்டவ் 80 புள்ளிகள்



குக்கர் 2.5 லிட்டர் 60 புள்ளிகள்

குக்கர் 1.5 லிட்டர் 40 புள்ளிகள்



SS டின்னர் செட் 30 புள்ளிகள்



பிளாஸ்டிக் டப் 25 புள்ளிகள்



SSCB கேசரோல் 15 புள்ளிகள்



SSCB சாஸ்பேன் 10 புள்ளிகள்



இன்சுலேட்டட் கன்டெய்னர் 5 புள்ளிகள்



## ஸ்ரீராம் சிட்ஸ்

மூன்று தலைமுறைகளாக புத்திசாலித்தனமான குடும்பங்களின் நிதிரீதியான நம்பிக்கை

**ஸ்ரீராம் சிட்ஸ் தமிழ்நாடு (பி) லிமிடெட்.**

கிரீம்ஸ் துவார், 149 கிரீம்ஸ் சாலை, சென்னை-6 • போன்: 4223 6000.

WORDCRAFT

எல்லோருக்கும் மனசு மிகவும் நன்றாக இருக்க முடியாது; இருக்க வேண்டும் என்று ஆசைப்பட்டாலும் முடியவில்லை. வீட்டிலே இருக்கிற குழந்தை சதா ஏதோ விஷமம் பண்ணிக்கொண்டிருக்கிறது. கத்திரிக்கோலை எடுத்து நல்ல துணிகளை, முக்கியமான காகிதங்களை நறுக்கி விடுகிறது; செடிகளை வெட்டி விடுகிறது. இப்படித் துஷ்டத்தனம் செய்கிறது. அதையே பள்ளிக்கூடத்துக்கு அனுப்பிவிட்டால், 'இத்தனை மணிக்குப் போக வேண்டும். இன்ன இன்ன பாடங்களை அதற்குள் எழுதிவிட வேண்டும். திரும்ப இத்தனை மணிக்குத்தான் வர முடியும். வந்தால் இதைச் செய்ய வேண்டும்' என்று அதற்கு ஒரு கட்டுப்பாடு வந்துவிடுகிறது. முன்பு காணப்பட்ட விஷமக் குணங்கள் எங்கோ போய்விடுகின்றன. பள்ளிக்கூடம் இல்லை. விடுமுறை நாள் என்றால், மறுபடியும் விஷமக் குணங்கள் தலைகாட்டுகின்றன. அதேபோல் நாம் கெட்ட எண்ணத்திலும் காரியத்திலும் ஈடுபட அவகாசம் இன்றி, நல்ல காரியங்களை ஒரு விதிப் பிரகாரம், ஒழுங்கு தப்பாமல் செய்வதுதான் முக்கியம்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

# கட்டுப்பாடு



# HMH Education Consultants



(National Coordinator for Annamalai University - IT Programmes)
In Technical Collaboration with ANNAMALAI UNIVERSITY

**# 45, Montieth Road, 01-III[rd] Floor, CEEBROS Centre,
Egmore, Chennai-600008.
Ph : 91-44-28518241, 28518242, Fax : 28518240,
E-mail: hmhec@vsnl.net Website: hmhec.in**

**Admissions are open - Academic Year : 2007-2008**

## ANNAMALAI UNIVERSITY - DDE
## COMPUTER AND I.T. PROGRAMMES

## Post Graduate Programmes

| | | | |
|---|---|---|---|
| **MCA** 3-Years | **M.Sc(IT)** 2-Years | **M.Sc(SE)** 2-Years | **M.Sc(CS)** 2-Years |
| **M.Com (CA)** 2-Years | **PGDCA** 1-Year | **PGDLAN** 1-Year | |

### Under Graduate Programmes - (Eligibility : +2)

| | | | |
|---|---|---|---|
| **BCA** 3-Years | **B.Sc(CS)** 3-Years | **B.Sc(IT)** 3-Years | **B.Sc(VC)** 3-Years |
| **B.B.A/B.Com/B.Sc Maths-CA** (Computer Applications) 3-Years | **Dual Degree System** 4-Years | **DCA** 1-Year Eligibility : SSLC | |

### Lateral Entry Option's :

- MBA Systems/M.Sc(IT) M.Sc(CS)/M.Sc(SE)Holders/MCA I & II year passed candidates can join 3rd year MCA
- PGDCA, PGDIT or any other PG Diploma in computer studies, DOEACC (A or B or C) level students can join II year MCA, MSc(IT), M,Sc.(SE).
- BCA, B.Sc(CS), B.Sc(IT) Students can join II year MCA
- Diploma Holders can join II year BCA, B.Sc(CS), B.Sc(IT)

Dr. S.B.NAGESWARA RAO
DIRECTOR

Dr. M.RATHINASABAPATHI
REGISTRAR

**Annamalai University, DDE, Computer Training Centres will conduct PCP classes and Computer Lab Training all over India**

For Details Contact : Annamalai University Computer Training Centre
Chennai ☏ 044-28292100 / 28292101

## Annamalai University Study Centres @ Chennai

| Egmore | Chrompet | Ambattur | Thiruvanmiyur | New Washermanpet |
|---|---|---|---|---|
| 28555010 | 22388035 | 26584345 | 24490488 | 25914169 |

ஜேம்ஸ்பாண்ட்டை உருவாக்கிய நாவலாசிரியர் ஐயன் ஃப்ளமிங்குக்கு வரும் ஜனவரி மாதம் நூறாவது பிறந்தநாள். ஜேம்ஸ்பாண்ட் பிறந்து நூறு ஆண்டுகள் பூர்த்தியாகப் போகிறது.



ஜேம்ஸ்பாண்டைத் தக்க முறையில் கௌரவிக்க விரும்பிய பிரிட்டன், அவர் உருவம் பதித்த ஆறு தபால் தலைகளை வரும் ஜனவரி மாதம் வெளியிட இருக்கிறது. ஆயிரம் பேர் வந்தாலும் ஜேம்ஸுக்கு ஈடாகுமா என்று சிலாகித்திருக்கிறது பிரிட்டன். Diamonds are forever, Dr.No, From Russia with Love, Casino Royale போன்ற உலகப் புகழ்பெற்ற புத்தகங்களின் அட்டைப்படங்கள் தபால் தலையில் பொறிக்கப்பட இருக்கின்றன.

ஜேம்ஸ்பாண்ட் தோன்றியது பிரிட்டனில்; வளர்ந்தது அமெரிக்காவில்; பரவியிருப்பது உலகெங்கும். எல்லா ஜேம்ஸ்பாண்ட் படங்களிலும் சில பொதுவான அம்சங்களைக் காணலாம். வில்லனுக்கு ஒரு கனவு இருக்கும். உலகத்தை அழிக்க வேண்டும். வில்லன் வீட்டில் இருந்தபடியே சிப்பிக் காளான் வளர்ப்பதுபோல் அணுகுண்டு தயாரிக்கும் விஞ்ஞானியாக இருப்பான்.

ஆபத்து. கூப்பிடு ஜேம்ஸ்பாண்டை. பிரிட்டிஷ் சீக்ரெட் ஏஜெண்ட். துப்பறியும் புலி. உலகத்தைப் பாதுகாக்கும் உத்தமர். உலகம் என்ன உலகம்? பிரபஞ்சத்தின் விதியை நிர்ணயிப்பவர்.

அதிநவீன சாதனங்கள் ஜேம்ஸ்பாண்டின் உள்ளங்கையில் குவிந்திருக்கும். மின்னல் வேகத்தில் வழுக்கிக்கொண்டு ஓடும் ஒரு கார். வில்லன் ஆட்கள் துரத்துவார்கள். ஒரு பட்டனைத் தட்டுவார். காரின் பின் பக்கத்தில் இருந்து தோட்டாக்கள் பாய ஆரம்பிக்கும். அப்படியே தாவிச்சென்று காரோடு கடலில் குதிப்பார். மற்றொரு பட்டன். கார் இப்போது படகாக மாறியிருக்கும். இன்னொரு பட்டன். கார் விமானமாக மாறும்.

இப்படியாக, பல்வேறு சாகஸங்களுக்குப் பிறகு தலைமை வில்லனைக் கண்டுபிடித்து விடுவார். ஆனால், அதற்குள் சக்தி வாய்ந்த வெடிகுண்டு ஒன்று தயாராகியிருக்கும். உலகத்தை அழிக்க உத்தேசித்திருக்கும் குண்டு. டிக் டிக் டிக் என்று சுவர்க் கடிகாரம் போல் துடித்துக்கொண்டிருக்கும். ஒரு சிவப்பு ஒயர். ஒரு பச்சை ஒயர். 5,4,3,2 என்று துடிதுடிக்கும்போது, ஜேம்ஸ்பாண்ட் சரியான ஒயரைப் பிடித்து இழுத்துக் குண்டைச் செயலிழக்க வைப்பார். உலகம் காப்பாற்றப்படும்.

தொடக்கக் கால ஜேம்ஸ்பாண்ட் பட வில்லன்கள் அத்தனை பேரும் சோவியத் யூனியனில்தான் மறைந்திருந்தார்கள். வில்லன்கள் மட்டுமல்ல, அவர்களுடைய அடியாட்கள், அடியாட்களின் அடிப்பொடிகள் என்று கெட்ட சாவகாசம் கொண்டவர்கள் அனைவரும் சோவியத்தைச் சேர்ந்தவர்களே. சரி, உலகத்தை அழிக்க வேண்டும் என்று அவர்களுக்கு ஏதாவது நேர்த்திக்கடனா?

சரி, ஏன் குறிப்பாக சோவியத்? உலகின் முதல் சோஷலிச அரசு பூத்தது அங்கேதான். அமெரிக்காவுக்கு கம்யூனிசம் ஆகாது; ஆகவே, சோவியத் ஆகாது. அமெரிக்காவுக்கு எதெல்லாம் ஆகாதோ, அதெல்லாம் பிரிட்



# சீக்ரெட் ஏஜெண்ட்!

டனுக்கும் ஆகாது. பிரிட்டனுக்கு எதெல்லாம் ஆகாதோ, அதெல்லாம் ஜேம்ஸ் பாண்டுக்கும் ஆகாது. காரணம், ஜேம்ஸ் பாண்ட் பிரிட்டிஷ் மகாராணிக்காகப் பணியாற்றுபவர். ஆகவே, ஜேம்ஸ் பாண்ட் பட வில்லன் ஒரு ரஷ்யன்.

அதேபோல்தான் க்யூபாவும். ஃபிடல் காஸ்ட்ரோ, சேகுவேரா போன்றவர்கள் அமெரிக்கர்களைப் பொருத்தவரை கலகக்காரர்கள். சேகுவேரா கட்டுக் கொல்லப்பட்டார். ஃபிடல் காஸ்ட்ரோவை நீக்க ஆயிரத்தோரு முறை முயன்று பார்த்துவிட்டார்கள். இன்னும் முடியவில்லை.

நிஜத்தில் முடியவில்லை. குறைந்தது, சினிமாவிலாவது ஒழித்துக் கட்டலாமே. எந்தெந்த நாடுகள் அமெரிக்காவையும் பிரிட்டனையும் தாக்குகின்றனவோ, அங்கெல்லாம் ஜேம்ஸ்பாண்ட் தனது சீறிப் பாயும் காருடன் அவதாரம் எடுப்பார். தலா ஒரு குண்டு. ஒழிந்து போங்கள் அத்தனை பேரும்.

# உள்ளும் புறமும்



**மருதன்**

சதாம் என்றொரு வில்லன். உலகை அச்சுறுத்தும் ஆயுதங்களைப் பதுக்கி வைத்திருக்கும் ஆபத்தான வில்லன். 5,4,3,2... கடிகாரம் துடிக்கிறது. பச்சை ஒயர், சிவப்பு ஒயர். பாய்ந்து வருகிறார் ஜார்ஜ் புஷ். கூப்படு ஜேம்ஸ்பாண்டை. 'இதோ வந்தேன் ஐயா' என்று டாங்கிகளை உருட்டிக்கொண்டு ஓடி வருகிறார் டோனி ப்ளேர். உள்ளங்கையில் அதிநவீன ஆயுதங்கள். ஷூட்டிங் ஆரம்பமாகிறது. ஒரு பட்டனை அழுத்துகிறார். ஃபலூஜா பற்றி எரிகிறது. இன்னொரு பட்டனை அழுத்துகிறார், அரபு காரிப் சிறைச்சாலைக் கதவுகள் கதறுகின்றன. டிஷ்யூம், டிஷ்யூம். தலைமை வில்லன் சதாம் கொல்லப்படுகிறார்.

சரி, படம் முடிந்தது என்று சீட்டை விட்டு எழுந்திருக்க யத்தனிக்கும்போது, ஒரு திடீர் ட்விஸ்ட். வில்லனை அகற்றிய பின்பும் படம் முடியவில்லை. ஜேம்ஸ்பாண்ட் ஊருக்குத் திரும்பவில்லை. அபாரமான துப்பறியும் திறன் இருந்தும் சதாம் வைத்திருந்த பயங்கர ஆயுதங்களையும் ஜேம்ஸால் கண்டுபிடிக்க முடியவில்லை. தேடிக்கொண்டிருக்கிறார்.

கூடிய சீக்கிரம் படம் முடியும். முடியும் போது ஒரு வாசகத்தைக் காண்பிப்பார்கள். கதையில் வரும் சம்பவங்கள் யாவும் கற்பனையே. யாரையும் குறிப்பிடுவன அல்ல. ○




# பிச்சையிடுதல்

திருநங்கையர்
நெருங்கி வருகையில்
விரைவிலேயே துரத்திவிட
விரல்களில்
முளைக்கின்றன காசுகள்

நிறுத்தத்தில்
ஏற்றப்பட்ட கார் கண்ணாடிகள்
பரட்டைத் தலை
சிறுவர்களால்
அழுக்காகாமல் தடுக்க
அவசரச் சில்லறைகள்

தொட்டுவிடுவார்களோ
எனும்
திடுக்கிடலின் விளைவாக
தொழுநோயாளிகளுக்கு
ஓரிரு ரூபாய்கள்

மனித நேயம்
இல்லாதிருப்பதன்
அறிகுறியாகவும் இருக்கலாம்
பிச்சையிடுதல்!



சேவியர்



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை – 63. போன் : 22760612.
City Office No.7,முதல் மாடி, வேலு தெரு, மேற்கு மாம்பலம்,
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை – 33.போன் 23714942.



# தீபாவளி நல்வாழ்த்துக்கள்



## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 18 ஆண்டுகளாக நடைபெற்று வரும் **"ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்"** தாய், தந்தையற்ற, திக்கற்ற மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 200 மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு, நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் **பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர்** ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (200 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| • மதிய உணவு | ரூ. | 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |

நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு.

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில்/ வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை **ஸ்ரீ சாரதா சக்தி பீடம்** என்ற பெயருக்கு **Cheque / DD / MO** மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர் நல்லாசியுடன்
நிர்வாகம்

கையிலிருக்கும் சேமிப்புப் பணத்தை வங்கிகளில் அல்லது சிட் ஃபண்டுகளில் முதலீடு செய்து, வட்டிப் பணத்தைப் பார்த்தது அந்தக் காலம். 1980க்குப் பிறகு பங்குச் சந்தையில் முதலீடு செய்யத் துவங்கிவிட்டார்கள் மக்கள்.

● இந்தியாவில் பங்குச் சந்தை வர்த்தகத்தை நடத்தும் பொறுப்பிலிருப்பவை மும்பை பங்குச் சந்தையும் தேசிய பங்குச் சந்தையும்தான். அன்றாடம் பல்வேறு நிறுவனங்களின் குறையும் மற்றும் ஏறும் பங்கு மதிப்புக்கேற்ப, இந்தச் சந்தைகளில் புள்ளிகள் ஏறும்; இறங்கும். பங்குச் சந்தைகளில் பதிவுசெய்து கொண் டிருக்கும் நிறுவனங்களின் பங்குத் தொகை ஏறுவது மற்றும் இறங்குவது குறித்த விவரங்கள் நிமிடத்துக்கு ஒருமுறை வெளியிடப் படுகின்றன.

● மக்களிடம் பங்குத் தொகை கேட்கும் நிறுவனங்கள் இரண்டு வகைப்படும். இருக்கும் நிறுவனங்களை விரிவு படுத்தி, மேலும் பல புதிய நிறுவனங்களைத் துவங்க பங்கு கேட்பது ஒரு வகை. புதிதாக நிறுவனம் துவங்க பங்குத் தொகை வசூலிப்பது மற்றொரு வகை.

● ஏற்கெனவே இருக்கும் நிறு வனங்கள் பங்கு மார்க்கெட்டில் பணம் புரட்டுவது கொஞ்சம் சுலபம். காரணம், அந்த நிறுவனம் எப்படிச் செயல்பட்டுக் கொண் டிருக்கிறது; அதை யார் நடத்துகிறார் கள்; எதிர்காலத்தில் அந்த நிறுவனம் தொடர்ந்து லாபம் ஈட்டுமா போன்ற விவரங்களை நாடி பிடித்துப் பார்க்க முடியும். அதற்கேற்றபடி முதலீடும் செய்யலாம்.

● அரசியல் தட்பவெப்பம், அரசு கவிழும் ஆபத்தான சூழல், பருவ மழை ஆகியவைகளைப் பொறுத்தும் பங்கு வர்த்தகம் சூடாகும்; அல்லது சறுக்கும்.

● மக்கள் மத்தியில் ஏற்கெனவே பிரபலமாக இருக்கும் தொழில் நிறுவனங் கள், புதிய தொழில்களுக்காகப் பணம் திரட்டும்போது, நம்பிக்கை ஏற்பட்டு மக்கள் முதலீடு செய்துவிடுகிறார்கள். ஆனால், சில சமயங்களில் அந்த நிறு வனங்கள் சர்ச்சையில் மாட்டிக்கொள்ளும் போது பங்கு மார்க்கெட்டிலும் அவை ஆடித்தான் போகின்றன.

● பங்கு வர்த்தகத்தில் ஈடுபட நினைப் பவர்கள் வங்கியில் D.Mat என்ற கணக் கைத் துவக்க வேண்டும். பங்குகளை வாங்குவது, விற்பது போன்றவற்றை அந்தக் கணக்கின் வழியாகவே செய்து கொள்ளலாம். D.Mat கணக்குத் துவங்க 'பான் கார்டு' மிக அவசியம்.

● பங்கு வர்த்தகத்தில் தரகர்கள் மூல மாகச் சென்றால், வாடிக்கையாளர் நம்பர் கொடுப்பார்கள். அதன் மூலம் வர்த்தகம் நடத்தலாம் அப்போதும் D.Mat கணக்கு



# பங்குமார்க்கெட்டில் நேரா 10 ரூபாய்!



அன்றாடம் பத்திரிகைகளைப் படிப்பது நல்லது. இந்தியாவில் எந்தெந்த நிறுவனங்களின் பங்குத் தொகை ஏறுமுகமாக இருக்கிறது; எது பாதாளத்துக்குப் போகிறது என்பது குறித்தெல்லாம் அவை அலசுகின்றன.

● பங்குத் தொகை பத்து ரூபாயிலிருந்து நிர்ணயிக்கப்படுகிறது. ஆனால், ஏற்கெனவே இயங்கும் நிறுவனங்களின் பங்குத் தொகை, அன்றாட பங்கு மார்க்கெட்டால் நிர்ணயிக்கப்படும்.

● கட்டுமானப் பொருட்கள் உற்பத்தி, பெட்ரோல், மின்சாரம், வங்கிகள்... ஆகிய நிறுவனங்களில் முதலீடு செய்வது பணத்துக்குப் பாதுகாப்பு.

● நீங்கள் போடும் பங்குத் தொகைக்கேற்ப நிறுவனங்கள் லாபத்திலிருந்து பங்கு கொடுக்கின்றன. இதை டிவிடெண்ட் என்று சொல்கிறார்கள்.

● லாபத்தில் வருமானத்தை எதிர்பார்ப்பதற்குப் பதிலாக, குறைந்த மதிப்பில் பங்குகளை வாங்கி, மதிப்பு ஏறும்போது விற்று, பணத்தை அள்ளுவது ஒரு கலை.

● பங்கு மார்க்கெட் வர்த்தகத்தைக் கண்காணித்து, தவறுகளைச் சரிப்படுத்த Security Exchange Board of India (SEBI) அமைப்பு செயல்பட்டு வருகிறது.

● பங்கு வர்த்தகத்தில் ஈடுபடுபவர்கள் தேவை. தரகர்கள் மூலம் சென்றால் பங்குகளை விற்கும்போது, அவர்கள் பொறுப்பெடுத்துக்கொண்டு அன்றைக்கு உள்ள மதிப்புக்கேற்ப நமக்குக் காசோலை வழங்கிவிடுகிறார்கள்.

● தரகர்கள் மூலமாகவே நடந்து வந்த பங்கு வர்த்தகத்தில் இன்றைக்கு வலைத்தளம் மூலமாகத் தனி நபர்களும் ஈடுபட வாய்ப்புக் கிடைத்துவிட்டது.

● மற்றொருவர் வாய்ப் பேச்சை நம்பி ஒரு நிறுவனத்தில் முதலீடு செய்ய வேண்டாம். அந்த நிறுவனம் பங்குத் தொகை கேட்டு வெளியிட்டிருக்கும் விளம்பரத்தை நன்கு படியுங்கள். அதன் தற்போதைய நிலை, எதிர்காலத்தில் எப்படி வளர்ச்சி பெறும் ஆகியவற்றைக் கணித்து முதலீடு செய்யவும்.

– கௌசி

## பார்த்திபன் கனவு

### இரண்டாவது பரிசுப் போட்டியில் பரிசுக்குரியனவாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட அழகான நான்கு அனுபவங்கள் இதோ...

# அப்பா



"அம்மா... அம்மா" தாயை மகள் அழைக்கும் குரல் இல்லை இது. பெற்ற மகளை தந்தை அழைத்த விதம்! அவருடைய நேசத்துக்கு இதைவிட வேறு உதாரணம் தேவையில்லை. இப்படி வளர்த்த மகளை அறியாமையின் காரணமாகத் தவறானவரிடம் திருமண உறவில் இணைத்தது விதியின் விளையாட்டு! அதனால் ஏற்பட்ட துன்பங்களால் பிறந்த வீட்டுக்கு வரும்போதெல்லாம் தோழமையுடன் ஆறுதல் வார்த்தைகளைக் கூறி என்னை பொறுமையின் சிகரமாய் விளங்க வைத்தவர். கால்நடையாக வந்து ஒரு டம்ளர் தண்ணீர்கூட அருந்தாமல் வெளியே நின்று மகளைப் பார்த்து விட்டுச் சென்ற அவருடைய பாதச் சுவடுகளை தார்ச் சாலைகள் அழித்துச் சென்றிருக்கலாம். ஆனால், கணவன் இறந்தவுடன் நான் பிறந்த வீட்டுக்கு வந்த பொழுது 'நாங்க இருக்கோம் கலங்காதே' என்று கண்களில் நீர் துளிர்க்க, கைகளைப் பற்றிக்கொண்டு அவர் சொன்ன வார்த்தைகள் முல்லைக்குத் தேர் கொடுத்த பாரியின் அரவணைப்பாக இருந்தது.

- ஆ. முத்துலெட்சுமி,
திருச்சி

நகர வாசனையில்லாத சிறு கிராமத்தில் வசித்த, ஏழு பெண் குழந்தைகளது தகப்பனின் மனோபாவம் எப்படியிருக்கும் என சற்றே யோசித்துப் பாருங்கள். அப்படியொரு குடும்பத்தில் பிறந்த மிகப்பெரும் பாக்கியசாலி நான். அத்தனையும் பெண்கள் என்ற சிறிய கலக்கம்கூட இன்றி, அனைவருக்கும்

## கனவின் நுழைவாயில்

# ஓர் அழகன்!

நல்ல கல்வியைக் கொடுத்து, உத்யோகத்திலும் அமர்த்திய 'அழகன்' என் தகப்பன். மிகவும் இறுகிப்போயிருந்த அவருடன், மெதுமெதுவாகப் பேசிப்பேசியே அவரது விருப்பு, வெறுப்பு, சுகம், துக்கம் அனைத்தையும் தெரிந்துகொண்டேன். மறக்க முடியாத சம்பவமாக இரண்டைக் கூறுவேன். 1. வேலை விஷயமாக நான் சென்னையிலிருந்தபோது, எனக்கு வந்த ஆண் நண்பனின் கடிதத்தைப் பிரிக்காமல், இன்னொரு கவரில் வைத்து கூரியரில் அனுப்பிய கண்ணியம் + நம்பிக்கை.

2. ஆண்களே வேலை செய்யத் தயங்கும் 'மார்க்கெட்டிங்' துறையில் என்னை அனுமதித்து, நான் சாதிக்க துணையாய் நிற்கும் அப்பா... எனது நெருங்கிய நண்பன்.

- கே.வி.புவனா,
மயிலாடுதுறை

ஐந்து குந்தவிகளைப் பெற்ற மகராசன் என் தந்தை. தாமும், தமது வருமானமும் மட்டுமே தன் குடும்பத்துக்கு ஆதாரம் என்ற நிலையிலும் எங்களிடம் அதீத அன்புடனும், பாசத்துடனும் பழகி எங்களை நற்குணங்களுடன் வளர்த்தார். விடுமுறை நாட்களில் உண்மையாகவே கைப்பிடித்து நூலகம், கடற்கரை, பூங்கா எனக் கூட்டிப் போய் மகிழ்வித்தவர். 'திருமணத்துக்குப் பணம் சேர்க்காது பெண்களைப் படிக்க வைக்கிறாரே!' என ஊரார் உற்றார் நினைக்க, அவர்களே திகைக்கும் அளவுக்கு, எங்களுக்கு மருத்துவம் முதல் ஸ்டெனோ, நர்ஸ் என அவரவர் விருப்பப்படி கல்விச் செல்வத்தை அள்ளிக் கொடுத்தார். நல்ல முறையில் எளிமையாகத் திருமணமும் செய்வித்தார். 'எங்கள் வீட்டில் பஞ்ச பூதங்கள் உள்ளனர்' என நகைச்சுவையாகவும், 'பெண்ணல்ல ஒவ்வொருவரும் பொன்' எனப் பெருமிதமாக மற்றவரிடம் எங்களை அறிமுகப்படுத்தத் தயங்காதவர்!

- எஸ்.ஜம்பகலட்சுமி,
சென்னை - 59

கல்கி படிக்க ஆர்வமூட்டியதே என் அப்பாதான். 'அமரதாரா' தொடர் வந்தபோது தவறாமல் இலங்கையிலிருந்து கல்கியை அனுப்பி வைப்பார். என் அப்பா ஊர் வந்துவிட்டால் எங்களுடன் ஒரே ஆட்டமும் பாட்டமும்தான். புளியங் கொட்டைகளை வைத்து 'ஒத்தையா, ரெட்டையா' விளையாட்டில் ஏமாற்றிக் கள்ளாட்டம் ஆடுவதில் என் அப்பா கில்லாடி. இரு விரல்களினிடுக்கில் ஒரு முத்தை ஒளித்து வைத்துக்கொண்டு எப்பவுமே ஜெயித்துக் கொண்டேயிருப்பார். ஒரு தடவை கையும் களவுமாகப் பிடித்துத் தோப்புக்கரணம் போட வைத்துவிட்டேன்.

- கமலா ராஜசேகரன்,
பொள்ளாச்சி

**அமரர் கல்கியின் புத்தகப் பரிசு பெறும் அழகான அனுபவங்கள்!**

## 21. வள்ளியின் சாபம்

**பொ**ன்னனுடைய குற்றச்சாட்டைக் கேட்டபோது, மாரப்பன் திடீரென்று ஆயிரம் தேள் கொட்டியவனைப் போல் துடிதுடித்தான். பொன்னனைப் பார்வையினாலேயே எரித்து விடுகிறவனைப் போல் ஒரு கணநேரம் கடுரமாய்ப் பார்த்தான். பின்னர், திரும்பித் தலையைக் குனிந்து கொண்டு நின்றான்.

''பூபதி! இதற்கு என்ன சொல்கிறாய்?'' என்று சக்கரவர்த்தி இடிகுரலில் கேட்கவும், மாரப்பனுக்கு மறுபடியும் தூக்கி வாரிப் போட்டது. ஆத்திரத்தினாலும், கோபத்தினாலும் அவனுக்கு அழுகை வந்து விட்டது.

''பிரபோ! இவன் சொல்வது பொய், பொய், பொய்! இளவரசனை நான் தூண்டி விடவேயில்லை. இவர்களுடைய சதியாலோசனையைப் பற்றி நன்றாய்த் தெரிந்துகொள்வதற்காகச் சிறிது காலம் இவர்களுக்கு உதவியாயிருப்பதுபோல் நடித்தேன்! அவ்வளவுதான். உடனுக்குடனே, தங்களுடைய தளபதி அச்சுதவர்ம பல்லவரிடம் எல்லா விவரங்களையும் சொல்லிக் கொண்டிருந்தேன்...''



அப்போது, ''பாவி! துரோகி!'' என்ற மெல்லிய பெண் குரல் கேட்டது.

சக்கரவர்த்தி, ''யார் அது?'' என்று அதட்டிவிட்டுச் சுற்றும் முற்றும் பார்த்தார். அந்தக் குரல் வள்ளி நின்ற திசையிலிருந்துதான் வந்தது. ஆனாலும் சக்கரவர்த்தி அந்தப் பக்கம் பார்த்தபோது வள்ளி பரமசாதுவைப் போல் நின்றாள்.

மாரப்பன் சிறிது தைரியமடைந்து, ''பிரபோ! விக்கிரமனை இந்த அடிமை தூண்டிவிடவேயில்லை; இது சத்தியம். அவனைத் தூண்டிவிட்டது யார் என்று எனக்குத் தெரியும்; சத்தியமாய்த் தெரியும்! சமூகத்தில் கட்டளை பிறந்தால் சொல்லுகிறேன்'' என்றான்.

''சொல்லு; தைரியமாய்ச் சொல்லு!'' என்றார் சக்கரவர்த்தி.

''ஜடாமகுடதாரியான ஒரு சிவனடியார் அருள்மொழி ராணியையும் விக்கிரமனையும் அடிக்கடி வந்து பார்த்துக்கொண்டிருந்தார். அவர் உண்மையில் சிவனடியார் இல்லை; கபட சந்நியாசி. அவர்தான் விக்கிரமனை இந்தப் பயங்கரமான காரியத்தில் தூண்டிவிட்டார்.''

இதுவரை மௌனமாய் இந்த நாடகத்தைப் பார்த்துக்கொண்டிருந்த குந்தவி இப்போது குறுக்கிட்டு, ''உமக்கு எப்படித் தெரியும்? அந்தக் கபட சந்நியாசியை நீர் பார்த்திருக்கிறீரா?'' என்று கேட்டாள்.

''ஆமாம், தேவி! இந்தக் கண்களாலேயே பார்த்திருக்கிறேன். இதோ சாது போல் நிற்கிறானே, இந்தக் ஓடக்காரனுடைய குடிசையில்தான் அவர்கள் அடிக்கடி சந்தித்துச் சதியாலோசனை செய்து வந்தார்கள். அந்தக் கபட சந்நியாசியின் சடையைப் பிடித்துக் குலுக்கி, அவனை இன்னாரென்று வெளிப்படுத்த நான் பிரயத்தனம் செய்தேன். இந்தப் பொன்னனும் வள்ளியுந்தான் அதைக் கெடுத்தார்கள்.''

''என் பேச்சை எடுத்தால் நாக்கை

# பார்த்திபன்

அறுத்துவிடுவேன்'' என்று வள்ளி மெல்லிய குரலில் முணுமுணுத்தாள்.

சக்கரவர்த்தி அவளைப் பார்த்துப் புன்னகையுடன், ''பெண்ணே! அடிக்கடி உன் உதடுகள் அசைகின்றன. ஆனால், வார்த்தை எதுவும் வெளியில் வரக் காணோம்! உனக்கு ஏதாவது சொல்ல வேண்டுமானால் பயப்படாமல் சொல்லு!'' என்றார்.

உடனே வள்ளி சக்கரவர்த்தியைப் பார்த்துக் கும்பிட்டுக்கொண்டு, ''பிரபோ! இவர் சொல்வதெல்லாம் பொய். சிவனடியார் இளவரசரைத் தூண்டிவிட்டார் என்பது பெரும் பொய். சாமியார் பெரிய மகான். அவர் அடிக்கடி வந்து ஆறுதல் சொல்லிக்கொண்டிருந்தபடியால்தான் எங்கள் மகாராணி இன்னும் உயிரோடிருக்கிறார். அவர் இளவரசரை 'இந்தக் காரியம் வேண்டாம், வேண்டாம்' என்றுதான் சொல்லிக் கொண்டிருந்தார். இளவரசருடைய மனத்தை மாற்ற முடியவில்லை. சாமியார் மேல் பொய்யாகக் குற்றம் சுமத்துகிறவர்கள் பாவிகள்; சண்டாளர்கள்; அவர்கள் நரகத்துக்குத்தான் போவார்கள்...'' என்றாள்.

''சாமியார் மேல் பொய்யாகக் குற்றம் சுமத்துகிறவர்கள் பாவிகள்; சண்டாளர்கள்; அவர்கள் நரகத்துக்குத்தான் போவார்கள்'' என்றாள் வள்ளி!

''நிறுத்து, பெண்ணே! போதும் சாபம் கொடுத்தது!'' என்று சக்கரவர்த்தி சொல்லி, குந்தவியை நோக்கிப் புன்னகையுடன், ''பார்த்தாயா, அம்மா!'' என்றார்.

''பார்த்தேன்; அந்தச் சாமியாரின் மந்திரத்தில் இந்தப் பெண்ணும் நன்றாய் மயங்கிப் போயிருக்கிறாள்! இவர்களில் ஒருவராவது முழுதும் உண்மை சொல்வதாக எனக்குத் தோன்றவில்லை அப்பா! ஒவ்வொரு வரும் மனத்தில் ஒரு நோக்கத்தை வைத்துக் கொண்டு பேசுகிறார்கள்'' என்றாள் குந்தவி.

அப்போது சக்கரவர்த்தி மாரப்ப பூபதியைப் பார்த்து, ''பூபதி! உன்மேல் ஏற்பட்ட சந்தேகம் தீரவில்லை. போனால் போகிறதென்று இந்தத் தடவை மன்னித்து விடுகிறேன். சேனாதிபதி பதவிக்கு நீ இப்போது ஆசைப்படுவது வீண். அந்தப் பதவிக்கு உன்னுடைய தகுதியை இனிமேல்தான் நீ நிரூபிக்க வேண்டும். அதுவரையில் உன் பேரில் வேறு குற்றம் ஏற்படாதபடி பார்த்துக் கொள்ள வேண்டும், தெரிந்ததா. இப்போது நீ போகலாம்!'' என்று மிகக் கடுமையான குரலில் கூறினார். மாரப்ப பூபதி சப்தநாடியும் ஒடுங்கியவனாய் வெளியேறினான்.

அந்தச் சமயத்தில் ஒரு சேவகன் உள்ளே வந்து சக்கரவர்த்திக்கு அடி பணிந்து ஓர் ஓலையை நீட்டினான். சக்கரவர்த்தி அதை வாங்கிப் பார்த்ததும், ''ஓடக்காரா! நீயும் உன் மனைவியும் இப்போது போகலாம். பிறகு உங்களைக் கவனிக்கிறேன். உன் மனைவியை அந்தச் சிவனடியார் விஷயத்தில் மட்டும் கொஞ்சம் ஜாக்கிரதையாய் இருக்கச் சொல்லு! அவருடைய மந்திரத்தில் அவள் ரொம்பவும் மயங்கியிருக்கிறாள்போல் தோன்றுகிறது'' என்றார்.

அப்போது வள்ளியின் முகத்திலே நாணத்தின் அறிகுறி தோன்றியது. திடீரென்று அது புன்னகையாக மாறியது. தலை குனிந்தவண்ணம் சக்கரவர்த்தியைக் கடைக் கண்ணால் பார்த்துக்கொண்டே அவள் பொன்னனைத் தொடர்ந்து வெளியே சென்றாள்.



**ச**க்கரவர்த்தி, அவர்கள் வெளியேறிய திசையைப் பார்த்தவண்ணம், "நானும் எத்தனையோ பெண்களைப் பார்த்திருக்கிறேன். இந்த வள்ளியைப் போல்.." என்று ஏதோ சொல்ல ஆரம்பித்தார்.

"அது இருக்கட்டும், அப்பா! ஏதோ ஓலை வந்ததே? அது என்ன!" என்று குந்தவி கேட்டாள்.

"போலி சிவனடியாரைப் பற்றி இத்தனை நேரம் பேசிக் கொண்டிருந்தோமல்லவா? உண்மையான சிவனடியார் இப்போது வருகிறார். நகருக்கு வெளியே சென்று அவரை நாம் எதிர்கொண்டழைத்து வரவேண்டும்" என்றார் சக்கரவர்த்தி.

"அவர் யார், அப்படிப்பட்ட உண்மையான சிவனடியார்? அப்பா! ஒருவேளை நமது அப்பர் பெருமானோ? அவரைப் பற்றி அன்று கொஞ்சம் அபசாரமாக நினைத்தேன். அடிகளை மறுபடியும் தரிசித்து அவரிடம் மன்னிப்புக் கேட்க வேண்டும்" என்றாள் குந்தவி.

"குழந்தையாகிய நீ அபசாரமாக நினைத்ததனால் அவருக்கு என்ன குறைவு நேர்ந்துவிடப் போகிறது? எப்போதும் சிவானந்தத்திலே திளைத்திருக்கும் மகான் அவர். கொஞ்சங்கூட அதைப் பற்றி உனக்குக் கவலை வேண்டாம், குழந்தாய்! இப்போது வரப் போகிறவர் அப்பர் பெருமான் அல்ல; பரஞ்சோதி அடிகள்."

"யார்? உங்களுடைய பழைய சேனாதிபதியா? உங்களுடன் வாதாபிக்கு வந்து புலிகேசியை வெல்ல உதவி புரிந்தவரா?"

"அவர் உதவி புரியவில்லை, குந்தவி! அவர்தான் புலிகேசியை வென்றவர். புற்றிலிருந்து ஈசல் கிளம்புவதுபோல் கிளம்பிய சாளுக்கர் படைகளைத் துவம்சம் செய்தவர். அந்த மகாவீரர்தான் இப்போது அரையில் உடுத்த துணியுடன், விபூதி ருத்திராட்சதாரியாய் ஸ்தல யாத்திரை செய்துகொண்டு வருகிறார். தமது பெயரைக்கூட அவர் மாற்றிக்கொண்டு விட்டார். சிறுத்தொண்டர் என்று தம்மைச் சொல்லிக்கொள்கிறார்."

"அவர் ஏன் சேனாபதி பதவியை விட்டார்? அவருக்கு ரொம்ப வயதாகி விட்டதா?" என்று குந்தவி கேட்டாள்.

"இல்லை; அவருக்கு அப்படி ஒன்றும் வயதாகவில்லை. அவர் சேனாபதி பதவியை விட்ட காரணத்தை இன்னொரு சமயம் சொல்கிறேன். இப்போது அவர் வரும் நேரம் ஆகிவிட்டது" என்றார் சக்கரவர்த்தி.

பிறகு "குந்தவி! பரஞ்சோதியுடன்கூட அவருடைய தர்மபத்தினியும் யாத்திரை

செய்து வருகிறார். அவர்களை எதிர்கொண்டழைத்து வரலாம்; நீயும் வருகிறாயா?'' என்று கேட்டார்.

''அவசியம் வருகிறேன், அப்பா! அவர்களைப் பார்க்க வேண்டுமென்று எனக்கு எத்தனையோ நாளாக ஆசை!'' என்றாள் குந்தவி.

## 22.சிறுத்தொண்டர்

உறையூருக்கு மேற்கே காவேரி நதியிலிருந்து சற்று தூரத்தில் ஓர் அழகான தாமரைக்குளம் இருந்தது. அந்தி நேரமானபடியால், அத்தடாகத்தை அழகு செய்த தாமரை மலர்கள் எல்லாம் அச்சமயம் இதழ் கூம்பியிருந்தன. மேல் வானத்தைப் பொன்மயமாகச் செய்து





கொண்டிருந்த சூரியன், சுழலுகின்ற தங்கத் தகட்டைப் போல், அதி விரைவாய்க் கீழே இறங்கிக் கொண்டிருந்தான்.

தாமரைக் குளத்தைச் சேர்ந்த படித்துறை மண்டபத்தில் சக்கரவர்த்தியும் அவருடைய செல்வப் புதல்வியும் வந்து தங்கியிருந்தார்கள். மண்டபத்துக்குச் சற்றுப் பின்னால் வேல்பிடித்த வீரர்கள் ஒதுங்கி நின்றார்கள். பட்டத்து யானையும், புரவிகளும் சிறிது தூரத்தில் காணப்பட்டன.

மேற்குத் திக்கிலிருந்து காவேரி ஆற்றின் ஓரமாக வந்த சாலையை, சக்கரவர்த்தி ஆவலுடன் உற்று நோக்கிக் கொண்டிருந்தார்.

குந்தவி, தடாகத்தின் படிக்கட்டில் இறங்கிக் கீழ்ப்படியில் வந்து நின்றாள். தளதளவென்று விளங்கிய தாமரை இலைகளின் வனப்பையும், கூம்பிய தாமரை மலர்கள், மொட்டுகள் இவற்றின் அழகையும் அவள் சிறிது நேரம் பார்த்து மகிழ்ந்தாள். தாமரை இலைகளின் மேலே முத்து முத்தாகத் தண்ணீர்த் துளிகள் நின்றதையும், இளங்காற்றில் தாமரை இலைகள் அசைந்தபோது அந்த முத்துக்கள் அங்குமிங்கும் ஓடிச் சில சமயம் ஒன்றோடொன்று கலந்தும், சில சமயம் பிரிந்தும் விளையாடியதையும் பார்த்துக் களித்தாள். அப்போது தடாகத்தின் தெளிந்த நீரில் பிரதிபலித்த அவளுடைய உருவமானது, தற்செயலாக அவள் பார்வையைக் கவர்ந்தது.

சந்தன நிறத் தந்தத்தினால் செய்ததைப் போல் விளங்கிய குந்தவியின் அழகிய நீண்ட புஜங்களும், பங்கஜ மலர்ப் பாதங்களும் பளிங்குபோல் தெளிந்த தண்ணீரிலே பிரதிபலித்தபோது பன்மடங்கு வனப்பும் சோபையும் பெற்று விளங்கின.

குந்தவி, தன்னுடைய பிரதி பிம்பத்தைத் தானே பார்த்தவண்ணமாகச் சற்று நேரம் ஸ்தம்பித்து நின்றாள்.

அந்தக் காட்சி, கைதேர்ந்த சிற்பி ஒருவன் செய்த அற்புத அழகு வாய்ந்த தந்தப் பதுமை ஒன்றை, உயர்ந்த ஆடை ஆபரணங்



களினால் அலங்கரித்து அக் குளக்கரையில் நிறுத்தி வைத்திருப்பது போல் தோன்றியது.

திடீரென்று தந்தப் பதுமைக்கு உயிர் வந்ததுபோல் குந்தவி ஒரு நீண்ட பெருமூச்சு விட்டாள். அவளுடைய மேனி அழகைப் பற்றி அவளிடம் ஏற்கெனவே பலர் பிரஸ்தாபித்ததுண்டு. தாய்மார்கள் சொல்லியிருக்கிறார்கள்; தோழிகள் அடிக்கடி கூறியிருக்கிறார்கள்; சித்திரக்காரர்களும் சிற்பிகளும் வியந்து பாராட்டியிருக்கிறார்கள். அப்போதெல்லாம் குந்தவி மேற்படி பாராட்டுதல்களைப் பொருட்படுத்தியதேயில்லை. ஆனால், இப்போது அவள் தன் மேனி அழகைப் பற்றித் தானே சிந்திக்கத் தொடங்கினாள். தோழிகள் அழகைப் பற்றிச் சொல்வதெல்லாம் வெறும் புகழ்ச்சியல்ல; விளையாட்டுமல்ல; உண்மைதான். ஆனால், ஆனால்...? இந்த அழகினாலே என்ன பிரயோஜனம் என்று அவளுடைய உள்ளத்தில் ஒரு கேள்வி எழுந்தது. அடுத்தாற்போல் ஆகா! அந்த இராஜகுமாரனுக்கு இந்த உறையூர்தானே? அவன் மட்டும் இப்போது என் அருகில் நின்று கொண்டிருந்தால்...? என்னும் எண்ணம் உண்டாயிற்று.

இதை அடுத்து இன்னதென்று விவரிக்க முடியாத மனக்கிலேசம் ஏற்பட்டது.

இந்த அலங்காரமெல்லாம் என்னத்துக் காக? நாளை முதல் ஆபரணம் ஒன்றும் அணிந்துகொள்ளக் கூடாது. இவற்றினால் என்ன பிரயோஜனம்? அழகு அதிகமாகி விடுகிறதா! இருக்கிற அழகு போதுமே? என்றெல்லாம் சிந்தனைகள் தோன்றின. இப்போதே இதையெல்லாம் எடுத்து எறிந்து விடுகிறேனே! என்று தலையில் சூடியிருந்த ஆபரணங்களை முதலில் எடுக்கப் போனாள்.

அப்போது திடீரென்று அவளுடைய தந்தையின் குரல், ''குந்தவி! இங்கே ஓடி வா!'' என்று விரைந்து அழைத்தது காதில் விழுந்தது. தன்னை மறந்த சிந்தனையில் ஆழ்ந்திருந்த குந்தவி, திடுக்கிட்டுத் தந்தை இருந்த பக்கம் நோக்கினாள்.

''அதோ பார் குந்தவி, சிவிகை வருகிறது! என் அருமைச் சிநேகிதர் வருகிறார்! பல்லவ சேனாதிபதி வருகிறார்! சளுக்கரை முறியடித்து புலிகேசியைக் கொன்ற மகாவீரர் வருகிறார்! உறையூருக்கு நாம் இந்தச் சமயம் வந்தது எவ்வளவு நல்லதாய்ப் போயிற்று!...''

**''அரசே! தங்களை நான் மறந்துவிடுவதா? தென்னாட்டில் நான் தரிசித்த ஒவ்வொரு ஸ்தலத்திலும் தங்களுடைய நினைவுதான் எனக்கு உண்டாயிற்று!''**

இவ்விதம், ஊரிலிருந்து உறவினர் வரக்காணும், சின்னஞ்சிறு குழந்தையைப் போல் சக்கரவர்த்தி அளவற்ற உற்சாகத்துடன் சொல்லிக்கொண்டே போனார். அவர் அவ்வளவு குதூகலம் கொண்டதை குந்தவி அதற்கு முன்னால் கண்டதேயில்லை.

சிறிது நேரத்துக்கெல்லாம் சிவிகை, தாமரைத் தடாகத்தின் அருகில் வந்துவிட்டது. மண்டபத்தில் சக்கரவர்த்தி நிற்பதைக் கண்டதும் ஏவலாளர் சிவிகையை விரைந்து கீழே இறக்கினார்கள். அந்தச் சிவிகையிலிருந்து தலையையும் முகத்தையும் நன்கு முண்டனம் செய்தவரும், விபூதி, ருத்திராட்ச தாரியுமான பெரியவர் ஒருவர் இறங்கினார். அவருடன் ஒரு மூதாட்டியும் இறங்கினார்.

அந்தப் பெரியவர் ''அரசே!'' என்று சொல்லிக்கொண்டு மண்டபத்தை நோக்கி விரைந்து வந்தார். சக்கரவர்த்தியும் ''சேனாதிபதி!'' என்று சொல்லிக்கொண்டு மண்டபத்திலிருந்து விரைவாகக் கீழே இறங்கி வந்தார்.

சற்று நேரம் ஒருவரையொருவர் பார்த்த வண்ணமாகக் கூப்பியக் கரத்துடன் நின்றார்கள். இருவருடைய கண்களிலும் நீர் ததும்பியது. பிறகு, ஏக காலத்தில் இருவரும் ஒருவரையொருவர் நெருங்கி வந்து ஆலிங்கனம் செய்துகொண்டார்கள். அப்போது இருவருடைய கண்களிலிருந்தும் கண்ணீர் பெருகி வழிந்து அருவியாக ஓடத் தொடங்கியது.

இதற்கிடையில், சிவிகையிலிருந்து இறங்கிய மூதாட்டியை நோக்கி குந்தவி வந்தாள். அவருக்குக் குந்தவி நமஸ்காரம் செய்ய யத்தனிக்க, அந்த அம்மையார் அதற்கு இடங்கொடாமல், அவளைத் தம்முடன் சேர்த்து அணைத்துக் கொண்டு, ''குழந்தாய்! பிறைசூடும் பெருமானுடைய அருளால் உனக்கு எல்லா மங்களமும் உண்டாகட்டும். உன் மனதிற்கிசைந்த மணவாளனை அடைந்து தீர்க்க சுமங்கலியாக வாழ்வாய்!'' என்று ஆசீர்வதித்தார். அவர் இவ்விதம் ஆசி கூறியபோது குந்தவியின் தேகத்தில் புளகாங்கிதம் உண்டாயிற்று.

பரஸ்பரம் ஆலிங்கனம் செய்துகொண்டு ஆனந்தக் கண்ணீர் சொரிந்த சக்கரவர்த்தியும், அவருடைய பழைய சேனாபதியும் சிறிது நேரத்துக்கெல்லாம் சற்று விலகி ஒருவரையொருவர் பார்த்துக்



கொண்டு நின்றார்கள்.

''உறையூருக்கு நான் இச் சமயம் வந்தது எவ்வளவு அதிர்ஷ்டம்! இல்லாவிட்டால் உங்களைப் பார்த்திருக்க முடியாதல்லவா? நீங்கள்தான் என்னை அடியோடு மறந்து விட்டீர்கள்; காஞ்சிக்கு வருவதேயில்லை!'' என்றார் சக்கரவர்த்தி.



''அரசே! தங்களை நான் மறந்து விடுவதா? தென்னாட்டில் நான் தரிசித்த ஒவ்வொரு ஸ்தலத்திலும் தங்களுடைய நினைவு எனக்கு உண்டாயிற்று. இந்தத் திவ்விய க்ஷேத்திர யாத்திரையில் தாங்களும் என்கூட இல்லையே என்று எவ்வளவோ வருந்தினேன். கடைசியாக பழனி மலையில் எழுந்தருளியிருக்கும் ஆண்டவனைத் தரிசித்த போதும் தங்களுடைய நினைவுதான் எனக்கு. அவருடைய சந்நிதியில் நான் விரும்பியது உடனே நிறைவேறிவிட்டது. இங்கே வந்ததும் தங்களைப் பார்த்தேன்...''

''சேனாபதி...!''

''பிரபோ! என்னை அவ்விதம் அழைக்க வேண்டாம்!''

''பரஞ்சோதி!''

''அது என் பூர்வஜன்மப் பெயர்! அதை இப்போது கேட்கப் பிடிக்கவில்லை.''

''கேளும், சிவபக்தரே!''

''அவ்வளவு பெருமைக்கு நான் உரியவன் அல்ல பிரபு! இன்று இந்நாட்டில் மகான் களான சிவபக்தர்கள் எத்தனையோ பேர் இருக்கிறார்கள். அவர்களுக்குத் தொண்டு புரியும் சிறுத்தொண்டன் நான்!''

''கேளும் சிறுத்தொண்டரே! நான் சொல்ல வந்த விஷயம் என்னவென்றால்...''

''சொல்லுங்கள் அரசே!''

''இந்த உலகத்தில் நான் செய்து முடிக்க வேண்டிய காரியங்கள் இன்னும் இரண்டு பாக்கியிருக்கின்றன. அவற்றை முடித்துவிட்டால், நானும் உங்களைப் போல் துறவு பூண்டு ஸ்தல யாத்திரை தொடங்கிவிடுவேன். ஆனால், உங்களைப்போல் தலையை முண்டனம் செய்து கொள்ள மாட்டேன். பார்த்தவர்கள் வசிஷ்டரோ, விசுவாமித்திரரோ அல்லது அகஸ்திய முனிவர் தானோ - என்று பிரமிக்கும்படியான ஜடா மகுடம் தரிப்பேன்!'' என்று சொல்லிச் சக்கரவர்த்தி நகைக்க, சிறுத்தொண்டரும் கூட நகைத்தார்.

அவ்விருவருடைய சிரிப்பின் ஒலியும், அந்தி நேரத்தில் கூட்டை நோக்கிப் பறந்த பறவைகளின் குரல்களுடன் கலந்து நாற்றிசையும் பரவி எதிரொலி செய்தன.

## 23. நள்ளிரவில்

அன்றிரவு ஏறக்குறைய ஒன்றரை ஜாமம் ஆனபோது உறையூர் நகரில் நிசப்தம் குடிகொண்டது. வீதிமுனைகளில் கல் தூண்களின்மேல் எரிந்துகொண்டிருந்த அகல் விளக்குகள் ஒவ்வொன்றாக மங்கி அணையத் தொடங்கின.

உறையூருக்கும் ஸ்ரீரங்கத்துக்கும் இடையில் சென்ற காவேரி நதியின்மேல் காரிருள் படர்ந்திருந்தது. அன்று சுக்கிலபட்சத்துச் சதுர்த்தி. போதாததற்கு வானத்தைக் கருமேகங்கள் மூடியிருந்தன. இரண்டொரு மழைத் தூறலும் விழுந்தது.

அத்தகைய காரிருளில் காவேரி நதியின் ஓரமாக ஜலத்தைக் கிழித்துக்கொண்டு படகு செல்லும் சலசலப்புச் சத்தம் கேட்டது. கொஞ்சம் உற்றுப் பார்த்தோமானால், ஒரு சிறு படகு கிழக்கேயிருந்து மேற்கே கரையோரமாகப் போவதைக் காணலாம். படகில் யாரோ ஒருவர் உட்கார்ந்திருப்பதும் மங்கலாகத் தெரிகிறது. கரையில் நின்ற வண்ணம் ஒருவர், படகைக் கயிற்றினால் இழுத்துக் கொண்டு போவதும் புலப்படுகிறது.

இன்னும் கொஞ்சம் நெருங்கிப் பார்த்தோமானால், அவர்கள் இருவரும் நமக்குத் தெரிந்த புள்ளிகள்தான் என்பதைக் காண்கிறோம். வேறு யாருமில்லை. கரையிலிருந்து படகை இழுத்துக் கொண்டு போகிறவன் படகோட்டி பொன்னன்; படகில் உட்கார்ந்திருப்பது வள்ளிதான். வள்ளியின் கையில் ஒரு சிறு கூடை இருக்கிறது. அதற்குள்ளே அகல் விளக்கு ஒன்று மினுக்மினுக்கென்று எரிகிறது. அது அணைந்து விடாமல் வள்ளி தன்னுடைய சேலைத் தலைப்பால் மறைத்துக்கொண்டு ஜாக்கிரதையாக எடுத்து வருகிறாள்.

அந்தக் கும்மிருட்டில் பிரவாகத்துக்கு எதிராகப் படகை மேற்கு நோக்கி இழுத்துக் கொண்டு போவது இலேசான காரியமில்லை. வழியில் படித்துறைகளும் நதிக்கரை மண்டபங்களும் ஓங்கி வளர்ந்து ஆற்றில் கவிந்திருந்த விருட்சங்களும் குறுக்கிட்டன. ஆனாலும் பொன்னன் சிறிதும் தளர்ச்சியடையாமல், மேற்படி தடங்கல்களையெல்லாம் தாண்டிப் படகை இழுத்துக் கொண்டு போனான்.

படகுக்குப் பின்னால் சுமார் முந்நூறு அடி தூரத்தில் ஒரு நெடிய உருவம் வந்துகொண்டிருந்தது. படகு நின்றபோதெல்லாம் அதுவும் நின்றது; படகு மேலே சென்றால் அதுவும் தொடர்ந்து வந்தது. கொஞ்சம் நெருங்கிப் பார்த்தால் இந்த உருவமும் நமக்குத் தெரிந்த மனிதனின் உருவந்தான் என்பதைக் காண்கிறோம். ஆமாம்; மாரப்ப பூபதிதான் அப்படி பொன்னனுடைய படகை நள்ளிரவில் தொடர்ந்து வந்துகொண்டிருந்தான்.

அவனுக்குப் பின்னால் இன்னும் கொஞ்ச தூரத்தில் அதே நதிக்கரை ஓரமாக இன்னொரு உருவம் சத்தம் செய்யாமல் வந்துகொண்டிருந்தது. ஜடாமகுடம் தரித்த சந்நியாசியின் உருவம் அது. ஆம், போர்க்களத்தில் பார்த்திபனுக்கு வரமளித்தவரும், பொன்னன் குடிசையில் நாம் சந்தித்தவருமான அதே சிவனடியார்தான்!

ஏறக்குறைய நள்ளிரவு ஆன சமயத்தில், பொன்னன் படகை நிறுத்தி மிகவும் மெல்லிய குரலில், ''வள்ளி! இறங்கு! வந்து விட்டோம்'' என்றான்.

அதே சமயத்தில், ஸ்ரீரங்கநாதரின் ஆலயத்தில் அர்த்தஜாம பூஜைக்குரிய மணிச் சத்தம் 'ஓம் ஓம்' என்று கிளம்பி, நள்ளிரவின் நிசப்தத்தை மீறிக்கொண்டு, வானவெளியெங்கும் வியாபித்து எதிரொலி செய்தது.

பொன்னனுக்கும் வள்ளிக்கும் உடம்பு நடுங்கிற்று. ''நல்ல சகுனம், வள்ளி! காரியம் ஜெயந்தான்! சீக்கிரம் இறங்கு!'' என்றான் பொன்னன்.

வள்ளி விளக்குக் கூடையை ஜாக்கிரதையாக எடுத்துக்கொண்டு படகிலிருந்து இறங்கினாள்.

பொன்னன் படகை அங்கிருந்த மரத்தின் வேரில் கட்டினான்.

பிறகு இருவரும் கரை மேல் ஏறினார்கள்.

அங்கே ஒரு நீண்ட மதிற்சுவர் இருந்தது. அந்தச் சுவரில் ஒரு வாசற்படி காணப்பட்டது. அதன் கதவு பூட்டியிருந்தது. பொன்னன் தன் மடியிலிருந்து ஒரு கொத்துச் சாவியை எடுத்து ஒரு சாவியினால் பூட்டைத் திறந்தான்.

இருவரும் கதவைத் தள்ளிக்கொண்டு உள்ளே பிரவேசித்தார்கள்.

'கம்'மென்று செண்பகப் பூவின் நறுமணம் வந்தது.

''பார்த்தாயா, வள்ளி! செண்பகப் பூவின் வாசனையை? இந்த அரண்மனைத் தோட்டத்துக்குள் இதற்கு முன் நீ வந்தது கிடையாதே?'' என்றான்.

''இரையாதே!'' என்றாள் வள்ளி.

பொன்னன் மறுபடியும் கதவைச் சாத்தி உட்புறம் தாழிட்டான்.

> ''பார்த்தவர்கள் வசிஷ்டரோ, விசுவாமித்திரரோ அல்லது அகஸ்திய முனிவர்தானோ என்று பிரமிக்கும்படியான ஜடாமகுடம் தரிப்பேன்'' என்றார் நரசிம்ம பல்லவர்.

"பயப்படாதே! என் பின்னோடு வா!"

"நீ சத்தம் போடுவதில்தான் எனக்குப் பயம்."

இருவரும் அந்தச் செண்பகத் தோட்டத்துக்குள் புகுந்து சென்றார்கள்.



சிறிது நேரத்துக்கெல்லாம் அதே மதில் வாசற்படியண்டை மாரப்ப பூபதி வந்தான். கதவின் வெளிப்புற நாதாங்கியை இழுத்து மாட்டினான். பிறகு அவன் நதியில் இறங்கி, பொன்னன் மரத்தின் வேரில் கட்டியிருந்த படகை அவிழ்த்து ஆற்றோடு மிதந்து போகும்படி இழுத்துவிட்டான்.

பின்னர் மதிற்சுவர் ஓரமாக மிக விரைவாய் நடந்து சென்றான்.

படகு கரையோரமாக மிதந்துகொண்டு சிறிது தூரம் போயிற்று. அங்கே வந்து கொண்டிருந்த சிவனடியார் அதைப் பிடித்து நிறுத்தினார். நிறுத்திய இடத்துக்கு அருகிலிருந்த ஒரு பெரிய விருட்சத்தின் வேரில் அதை இழுத்துக் கட்டினார்.

மறுபடியும் மேல்நோக்கிச் சென்று அதே மதிற்சுவரின் வாசற்படிக்கு வந்தார். மாரப்ப பூபதி இழுத்துப் போட்ட நாதாங்கியைக் கழற்றிவிட்டார்.

மீண்டும் திரும்பிச் சென்று படகு கட்டியிருந்த மரத்துக்குப் பின்னால் அமர்ந்தார்.

அச்சமயம் நதியின் அக்கரையில் அநேக தீவர்த்திகளுடன் கும்பல் காணப்பட்டது. சிறிது நேரத்துக்கெல்லாம் அந்தத் தீவர்த்திகள் நதியின் நடு மத்திக்கு வந்துவிட்டன. பல படகுகள் நதியைக் கடந்து வந்துகொண்டிருந்தன என்று தெரிந்தது.

சிவனடியார் மறைந்திருந்த மரத்துக்குச் சிறிது கிழக்கே படகுகள் கரைக்கு வந்து சேர்ந்தன. படகுகளிலிருந்த பலர் இறங்குகிறது தீவர்த்திகளின் ஜோதியில் தெரிந்தது. அவர்களில் சிறுத்தொண்டரும் அவர் மனைவியாரும் குந்தவி தேவியும் காணப்பட்டனர். சக்கரவர்த்தியின் பிரதிநிதியாக உறையூரை ஆண்டு வந்த தளபதி அச்சுதவர்மர், அவர்கள் எல்லோருக்கும் முன்னால் சென்றார். மற்ற பரிவாரங்களும் ஏவலாளர்களும் பின்னால் வந்தார்கள்.

ஸ்ரீ ரங்கநாதரின் அர்த்தஜாம ஆராதனையைத் தரிசித்துவிட்டுத் திரும்பிய அந்த பக்தர்குழாத்தில் சக்கரவர்த்தி நரசிம்மவர்மரை மட்டும் காணவில்லை.

காவேரிக் கரையை ஒளிமயமாக்கிய தீவர்த்திகளுடன் அந்தக் கும்பல் படகிலிருந்து கரையில் இறங்கியபோது, சிவனடியார் தாம் இருந்த மரத்தின் மறைவில் இன்னும் நன்றாய் மறைந்துகொண்டு அசையாமல் நின்றார். அவர் மூச்சுவிடும் சத்தம்கூட அப்போது கேட்கவில்லை.

தீவர்த்திகளுடனே அந்தக் கும்பல் நகருக்குள் புகுந்து மறைந்த பிறகு, காவேரி நதிதீரத்தில் முன்னால் இருந்ததைவிட அதிகமான கனாந்தகாரம் குடிகொண்டது.

சிவனடியார் மரத்தின் மறைவிலிருந்து மறுபடியும் வெளிவந்து நதிக்கரையில் படகின் அருகில் அமர்ந்தார். அந்தக் காரிருளிலுங்கூட மேற்கூறிய மதில் வாசலின் பக்கம் அவருடைய கண்கள் கூர்மையாகப் பார்த்தன. அவருடைய செவிகளும் கதவு திறக்கப்படும் சத்தத்தை எதிர்நோக்கிக் கூர்மையாய்க் கேட்கலாயின.

**சிவனடிார் மரத்தின் மறைவிலிருந்து மறுபடியும் வெளிவந்து நதிக்கரையில் படகின் அருகில் அமர்ந்தார். அந்தக் காரிருளில் அவருடைய கண்கள் மதில் வாசலின் பக்கமே பார்த்தன!**

(தொடரும்)

# ஆணுக்கு உயிரணு உற்பத்தி ஆகி, பெண்ணுக்கு கருக்குழாய் அடைப்பு நீங்கி, குழந்தை பிறக்கிறது..!

இந்த உலகம் என்றென்றும் அழியாமல் நிலைத்திருக்க வேண்டுமானால் வாரிசுகள் பிறந்து கொண்டே இருக்க வேண்டும். ஆனால் திருமணமான சில தம்பதியரில் தனது ஆஸ்தியை ஆளவும், தனது பரம்பரை வம்சத்தை இனவிருத்தி செய்யவும், பெற்றோரைக் காப்பாற்றவும், கடைசி காலத்தில் ஈமக் கிரியைகள் செய்யவும் தங்களுக்குக் குழந்தைகள் பிறக்கவில்லையே என்று ஏங்கி கண்ணீரோடு கோயில் குளங்களை சுற்றிக் கொண்டும், மந்திர தந்திரங்களில் ஈடுபட்டும், தாயத்துக்களை கட்டிக் கொண்டும், அரச மரத்தையும் - வேப்ப மரத்தையும் சுற்றிக் கொண்டும் சிலர் நரபலி கொடுத்துக் கொண்டும், வயோதிக காலம் வரை தங்களது வாழ்நாளை வீணாக்கிக் கொள்ளுகிறார்கள். அதோடும் இல்லாமல் பெண்கள் மலடி என்ற பட்டத்துடன் வாழ்ந்து வருகிறார்கள். இதனால் கணவராலும், உறவினராலும் வெறுக்கப்பட்டு, ஒதுக்கப்படுகிறார்கள். சிலர் தற்கொலை முயற்சியிலும் ஈடுபடுகிறார்கள்.

இவர்களின் துன்பங்களைப் போக்க திருவண்ணாமலை மாவட்டம் வந்தவாசியிலும், சென்னை வடபழனி 100அடி சாலையிலும் 'நவீன வைத்தியாலயா' என்ற ஆஸ்பத்திரி நடத்தி வரும் 'மருத்துவ திலகம்' டாக்டர் **A.** அர்ஜுனா, டாக்டர் **V. A.** ஆண்டாள் அர்ஜுனா, டாக்டர் **M. A.** சரவணன் ஆகிய மூவரும் ஹோமியோ - சித்த - ஆயுர்வேத முக்கூட்டு மருத்துவ சிகிச்சையில் குழந்தை பாக்கியம் உண்டாக்கித் தருகிறார்கள்.

சில ஆண்களுக்கு சிற்றின்பத்தில் நாட்டம் இல்லாமல் இருப்பதாலும் ஆண்மை அழிந்திருப்பதாலும், உயிரணு உற்பத்தி அறவே இல்லாமையாலும் சிலருக்கு உயிர் அணுக்கள் உற்பத்தி குறைவாகவே இருப்பதாலும், அம்மை நோயினாலும், புட்டாளம்மையாலும், மஞ்சள் காமாலையாலும், டைபாய்டு ஜுரத் தாலும், முறையற்ற செக்ஸ் பழக்க வழக்கங்களாலும் உயிரணு உற்பத்தி பாதிக்கப்படுகிறது. இதற்கு முக் கூட்டு மருத்துவத்தால் சிகிச்சை யளித்து குழந்தை பிறக்கச் செய் கிறோம்.

பெண்களுக்கும் பல குறைபாடுகள் இருக்கிறது. மாதவிடாய் கோளாறுகள், கருப்பை ஓவரிகள் வளர்ச்சியின்மை, கருப்பை ஓவரி



• உயிரணு உற்பத்தி ஆகியும், கருக்குழாயில் அடைப்பு நீங்கியும் - ஆண் குழந்தை பெற்ற செபஸ்டின் - மேரி தம்பதி

களில் கட்டிகள், கருமுட்டை உண்டாகாதிருத்தல், கருக்குழாயில் சதை அடைப்பு ஏற்பட்டிருத்தல், கரு முட்டை வெடிக்காமலிருத்தல் - சிற்றின்பத்தில் சில பெண்களுக்கு நாட்டம் உண்டாகாமலிருத்தல் போன்ற காரணங்களை முக்கூட்டு மருத்துவ சிகிச்சை அளித்து குழந்தை பிறக்கச் செய்கிறோம்.

சென்னையில் கீதா - சுப்பிரமணி தம்பதியர் முக்கூட்டு சிகிச்சையால் தற்போது 9 மாத கர்பவதியாக உள்ளார்.

பெங்களூர் சிவாஜி நகரில் பசவப்பா தம்பதியருக்கு 20 ஆண்டு குழந்தை இல்லாமல் இருந்து உயிரணு உற்பத்தி ஆகி முக்கூட்டு சிகிச்சையில் ஆண் குழந்தை பெற்றுள்ளார்கள்.

கோவையில் பல ஆண்டுகள் குழந்தை யில்லாதிருந்த ஒரு டாக்டர் தம்பதியர் கருக்குழாய் அடைப்பு நீங்கியும், உயிரணு உற்பத்தி அதிகரித்தும் முக்கூட்டு சிகிச்சையால் ஆண் குழந்தை பெற்றுள்ளார்கள்.

கோயம்புத்தூர் ஆர்.எஸ்.புரத் தில் அறவே உயிரணு உற்பத்தி இல்லாத சிகாமணி என்பவருக்கு எங்கள் சிகிச்சையில் 110 மில்லியன் கவுண்ட்டும், 20% மொட்டிலிட்டியும் (உயிரணு) உற்பத்தி ஆகியுள்ளது. இது ஒரு பெரிய சாதனை.

திருச்சி மாணிக்கவேல் என்பவருக்கு உயிரணு உற்பத்தி அறவே இல்லாதிருந்து தற்போது (கவுண்ட்) 110 மில்லியனும், 60% மொட்டிலிட்டியும் உற்பத்தி ஆகி 144 மில்லியன் வரை உயர்ந்துள்ளது.

உலகின் பல நாடுகளிலிருந்து வந்தும், இந்தியாவில் பல மாநிலங்களிலிருந்து வந்தும் எங்கள் நவீன வைத்தியாலயாவில் ஹோமியோ - சித்த - ஆயுர்வேத முக்கூட்டு சிகிச்சை பெற்று குழந்தை பாக்கியத்துடன் வாழ்ந்து வருகிறார்கள். பலர் தற் போது சிகிச்சை பெற்று வருகிறார்கள். நூற்றுக்கு தொண்ணூறு சதவிகிதம் பேர் குழந்தை பெற்றுக் கொள்ளுகிறார்கள். நீங்களும் குறைந்த செலவில் குழந்தை பெற வேண்டுமானால் எங்களை உடனே சந்திக்கவும்'' என்று அழைக்கிறார்கள்.



டாக்டர்
**M.A.சரவணன்**
B.H.M.S.



மருத்துவ திலகம்
டாக்டர் A. **அர்ஜுனா,**
டாக்டர் V. A. **ஆண்டாள் அர்ஜுனா**

## நவீன வைத்தியாலயா

ஹோமியோபதி-சித்தா-ஆயுர்வேத மலடு நீக்கும் ஆஸ்பத்திரி

சென்னையில் : சனி, ஞாயிறு, திங்கள் ஆகிய நாட்களில்

டாக்டர்களை சந்திக்கும் இடம்: **பழைய எண் : 9, புதிய எண் : 65, 100 அடி ரிங் ரோடு, வடபழனி, (கவுரிசங்கர் திருமண மண்டபம் எதிரில் - போக்குவரத்து சிக்னல் பக்கத்தில்). சென்னை - 600 026.**

**போன் : 044- 23623464**

**வந்தவாசியில்: செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி ஆகிய நாட்களில் டாக்டர்களை சந்திக்கலாம்.**

**நெ. 27, பிராமணர் தெரு, வந்தவாசி - 604 408. திருவண்ணாமலை மாவட்டம்**

**போன் : 04183 - 225208, 228077. Fax : 228077**

**செல்: 94430 - 36522, 99437 - 89512**

web: www.naveenainfertilityhospital.com

E-mail: drarjuna@naveenainfertilityhospital.com

Advt.

## 4.11.07 முதல் 10.11.07 வரை




# நடக்குமென்பார்;

**மேஷம்:** பூர்வீகச் சொத்து பாகப் பிரிவினை ஆகி தன யோகம் கிட்டும். உடல் நிலை ஆரோக்கியம் சீராகும். திருமணம் கைகூடும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். வியாழன்தோறும் தட்சிணாமூர்த்தி சுவாமியை வழிபட்டு வருதல் சங்கடங்களைத் தீர்க்கும்.

**ரிஷபம்:** திருமணக் காரியம் கைகூடும். பண அபிவிருத்தி ஏற்படும். குழந்தைகளால் மனமகிழ்ச்சி ஏற்படும். நண்பர் / உறவினர்கள் மூலம் பலன் கிட்டும். சனிக்கிழமைதோறும் சனீஸ்வர பகவானுக்குத் தீபம் ஏற்றிவர சங்கடங்கள் தீரும்.

**மிதுனம்:** மறைமுக எதிர்ப்புகள் விலகும். வழக்கு வெற்றிப் பாதையில் செல்லும். கல்வி வளம் சிறப்படையும். மன சஞ்சலம் தீரும். வியாழன்தோறும் குரு பகவானுக்கு விளக்கு ஏற்றி வந்தால் நற்பலன் கிட்டும்.

**கடகம்:** சுபச்செலவு உண்டாகும். உத்தியோகத்தில் வேலைப்பளு கூடும். வீட்டைக் கவனிக்க நேரம் இருக்காது. யாரிடமும் அதிக பேச்சு வைத்துக் கொள்ளக் கூடாது. பணக்கஷ்டம் இருக்காது. செவ்வாய், வெள்ளிக்கிழமைதோறும் நவகிரகத்துக்கு தீபம் ஏற்றிவர நற்பலன் கிட்டும்.

**சிம்மம்:** சில காரியங்கள் திட்டமிட்டபடி நடக்கும். பதவி, பட்டம் தேடி வரும். திருமணம் கைகூடும். உடல்நிலை சீராகும். இல்லறத்தில் கணவன் - மனைவி விட்டுக்கொடுத்துப் போவது நல்லது. குழந்தைகள் மூலம் சந்தோஷம் கிட்டும். வியாழன்தோறும் ராகவேந்திர சுவாமியை வணங்கி நெய் தீபம் ஏற்றிவர நற்பலன் கிட்டும்.

## பரத்வாஜ்

● என் மகனுக்கு எப்போது திருமணம் நடக்கும்?

– **எஸ்.ஜி.ராதா, சென்னை - 83**

உங்கள் மகனுக்கு 2008-ல் திருமணம் முடியும். பிறந்த ஊருக்கு மேற்குத் திசையில் பிறந்த பெண் அமைவார். சொந்தம்

**கன்னி:** மன சந்தோஷம் நிறைந்த வாரம். ஆடை, ஆபரண, அலங்காரப் பொருட்கள் சேரும். பணக் கஷ்டம் இருக்காது. கல்வி வளம் மேலோங்கும். வேலையில் பதவி உயர்வு கிட்டும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். வழக்கு வெற்றி பெறும். சனிக்கிழமை தோறும் அன்னதானம் செய்து வர நற்பலன் கிட்டும்.

**துலாம்:** வாக்கு வன்மை மேலோங்கும். பொருளாதாரச் சிரமம் இருக்காது. திருமணக் காரியம் முடிவாகும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். நீண்ட காலம் வராத நிலுவைகள் வசூலாகும். வழக்கு

# நடக்கும்!

வெற்றி அளிக்கும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. செலவுகள் சுபமானதாக இருக்கும். புதிய வேலைவாய்ப்பு வந்து சேரும். செவ்வாய், வெள்ளிக்கிழமை தோறும் ராகு / கேது கிரஹங்களுக்கு தீபம் ஏற்றிப் பூ வைத்து வழிபட்டு வந்தால் சிரமங்கள் விலகும்.

**விருச்சிகம்:** மன சந்தோஷமான வாரம். வெளிநாட்டிலிருந்து நல்ல தகவல் வரும். திருமணக் காரியம் கைகூடும். தாயின் உடல்நிலை பாதிக்கும். வாக்கு வன்மை மேலோங்கும். கொடுக்கல், வாங்கல் சிக்கல் தீரும். குழந்தைகள் இடம் மாறிப் போவார்கள். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. சனிக்கிழமை தோறும் அன்னதானம் செய்து வர, சங்கடங்கள் விலகி நற்பலன் உண்டாகும்.

**தனுசு:** வெளியூர்ப் பிரயாணம் வந்து சேரும். தெய்வ அனுகூலம் சித்திக்கும். நீண்ட நாள் கடன் தொல்லை தீரும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. கல்வியில், வேலையில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். வீடு / மனை வாங்க உகந்த காலம். வியாழன்தோறும் குருப்ரீத்தி செய்துவர நற்பலன் அளிக்கும்.

**மகரம்:** வாகனத்தில் செல்லும்போது உஷார். குடும்ப வாழ்வில் அனுசரணைத் தேவை. பணக் கஷ்டம் விலகும். யாருக்கும் ஜாமீன் போடக் கூடாது. வேலை பளு அதிகரிக்கும். மறைமுக எதிர்ப்புகள் இருக்கும். வீடு / மனை வாங்க உகந்த நேரம். திருமணக் காரியம் கைகூடும். தொழில் துறையில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். ராகு / கேது / சனி வழிபாடு செய்துவர நற்பலன் அடையலாம். சனீஸ்வரருக்கு விளக்க ஏற்றவும். சங்கடங்கள் தீரும்.

**கும்பம்:** வேலைப்பளு அதிகரிக்கும். வீடு / மனை வாங்க ஏற்ற காலம். தடை விலகித் திருமணம் கைகூடும். நண்பர், உறவினர் மூலம் ஆதாயம் ஏற் படும். வியாபாரத்தில் நல்ல அபிவிருத்தி ஏற்படும். ராகு / கேது / குரு / சனி வழிபாடு செய்துவர நற்பலன் கிட்டும். ஆஞ்சநேயரை வழிபட்டு வரவும்.

**மீனம்:** உல்லாசமான வாரம். ஆடை ஆபரணப் பொருட்கள் சேரும். வெளிநாட்டு மனிதர்கள் மூலம் நன்மை ஏற்படும். எதிர்ப்புகள் விலகும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. மனச் சலனம் தீரும். படிப்பில் முன்னேற்றம் ஏற்படும். வேலையில் உயர்வு ஏற்படும். வீடு / மனை வாங்க நல்ல தருணம். பரிகாரம் தேவையில்லை.

## பதில்கள்

கிடையாது.

● என் மகனின் ஜாதகம் எப்படி உள்ளது?

– கணேசமூர்த்தி, சேலம்

தனுசு லக்னம், மீன ராசி, உத்திரட்டாதி நட்சத்திரத்தில் பிறந்த இவருக்கு, ஆயுள் பலம் தீர்க்கம். உயர்ந்த கல்வி வளம் உண்டு.

'பெப்சி' உமா - தமிழ்தொலைக் காட்சி நேயர்கள் மறக்கவியலாத பெயர். அண்மையில் சன் டீ.வி.யிலிருந்து கலைஞர் டீ.வி.க்கு இடம் பெயர்ந்து 'ஹலோ நான் உமா பேசறேன்' என்று அங்கேயும் ஆரம்பித்துவிட்டார். புது சேனலின் அனுபவங்களையும் பழைய சேனலின் நினைவுகளையும் நம்மிடம் பகிர்ந்துகொண்டார்...

# சன் டு கலைஞர்

"சன் டீ.வி.யில் கடந்த பதினைந்து வருடங்களாக காம்பியரிங் செய்துவிட்டு இப்போது கலைஞர் டீ.வி.க்கு மாறியதற்கு, குறிப்பிட்டுச் சொல்லும் அளவுக்கு எந்தக் காரணமும் இல்லை. மாற்றம் என்பது அனைவரின் வாழ்க்கையிலும் வந்து போகக்கூடிய ஒரு நிகழ்வுதான். எனக்கு இப்போது வந்திருக்கிறது, அவ்வளவுதான். கலைஞர் டீ.வி.க்கு நான் வந்ததால் என்மீது எந்த அரசியல் முத்திரையும் குத்தப்படாது. இத்தனை ஆண்டுகளாக சன் டீ.வி.யில் இருந்தேன். அதுவும் அரசியல் பின்புலம் கொண்ட சேனல்தான். ஜெயா டீ.வி.யிலும் எத்தனையோ கலைஞர்களும், தொகுப்பாளினிகளும் இருக்கிறார்கள். அவர்களை யாரும் அரசியல் கண்ணோட்டத்துடன் பார்ப்பதில்லையே!



தவிரவும், நமது முதல்வர் கலைஞரின் எழுத்துக்கும் பேச்சுக்கும் சிறு வயதிலிருந்தே ரசிகை நான். இன்று அவரின் மேற்பார்வையில் பணியாற்றுவது பெருமையான விஷயம். இந்த வயதிலும், எத்தனையோ முக்கியப் பணிகளுக்கிடையே, தினமும் எங்கள் அலுவலகத்துக்கு வந்து நிகழ்ச்சிகளைப் பார்வையிடுகிறார். கருத்துகளைச் சொல்கிறார். சின்னச் சின்ன விஷயங்களையும் கூர்ந்து கவனிக்கிறார். இந்த எண்பத்துநான்கு வயது இளைஞரின் உழைப்பும், திறனும் எங்களுக்கு உற்சாக டானிக். இடம் மாறியதால் என் ரசிகர்கள் மனதிலிருந்து நான் இடம்பெயரவில்லை என்பதையும் நான் குறிப்பிட விரும்புகிறேன். சன் டீ.வி.யில் உள்ளபோது நேயர்கள் காட்டிய அதே அன்பும் ஆர்வமும் எள்ளளவும்

குறையவில்லை. அதேபோல் டெலிபோனில் பேசி பாட்டுப் போடுவது என்று அரைத்த மாவையே அரைத்துக்கொண்டிருக்காமல், இன்னும் இரண்டு மாதங்களில் டாக் ஷோ நிகழ்ச்சியை வழங்கவிருக்கிறேன். இதனை என் சொந்த நிறுவனமான 'கிரியேட்டிவ்' மூலம் வழங்க உள்ளேன். இந்த டாக் ஷோவில் இலக்கியம், சமயம், அரசியல், கல்வி, பத்திரிகை, மருத்துவம்... எனப் பல்வேறு துறை சார்ந்த பிரபலங்களின் நேர்காணல்களும் இடம்பெறவிருக்கின்றன.

இதுபோன்ற ஒரு நிகழ்ச்சியைக் கடந்த 95ம் ஆண்டு சன் டி.வி.யில் நானும் கங்கை அமரனும் இணைந்து வழங்கியுள்ளோம். இப்போது இன்னும் சுவாரஸ்யத்துடன் கலைஞர் டி.வி.யில் வரப்போகும் டாக் ஷோ, பல்வேறு ஆக்கபூர்வமான சிந்தனைகளைக் கொண்டதாக இருக்கும்.

# மாறியது ஏன்..?

**த**மிழ் சேனல்களில் உள்ள தொகுப்பாளினிகள் ஆங்கிலம் கலந்த தமிழில் பேசுவது வருத்தமளிப்பதாக உள்ளது. சூர்யா, ஏஷியாநெட், ஜெமினி என்று பிறமொழி சேனல்களின் தொகுப்பாளினிகள் முடிந்தவரையில் ஆங்கிலம் கலக்காமல் அந்தந்த மொழிகளிலேயே பேசுகிறார்கள். நாம் மட்டும் ஏன் இப்படி? மாற வேண்டும். அதேபோல் கிளாமராக உடையணியும் காம்பியர்கள் பற்றி நான் எதுவும் கூற முடியாது. என்னைப் பொறுத்தவரையில் நான் அணியும் உடைகள் கண்ணியக் குறைவாக இருக்கக் கூடாதென்பதில் மிகவும் கவனமாக இருக்கிறேன். குடும்பங்களின் கூடத்துக்கே நான் செல்வதால் அனைவரும் என்னை அவர்கள் குடும்பத்தில் ஒருவராக நினைக்க வேண்டும் என்றே ஒவ்வொரு கணமும் விரும்புகிறேன். அப்படி நினைப்பதால் தான் இன்றளவும் தமிழ்நாட்டின் குக்கிராமத்தில் இருப்பவர்கள்கூட என்மீது மதிப்பும் அன்பும் வைத்திருக்கிறார்கள்.



ஆரம்ப காலங்களில் விளம்பர நிறுவனத்தைச் சேர்ந்தவர்கள் சிலர், என்னை க்ளமராக நடிக்கச் சொல்லி அணுகினார்கள். நான் மறுத்திருக்கிறேன்.

வட இந்திய சேனல்களின் தொகுப்பாளினிகள் க்ளாமராக உடை அணிவதை அங்குள்ள மக்கள் ஏற்றுக்கொள்கிறார்கள். ஆனால், நம் தமிழ்க் கலாசாரம் வேறு என்பதை தொகுப்பாளினிகள் புரிந்துகொண்டால் நல்லது'' என்கிறார் உமா, தமது அக்மார்க் புன்னகையோடு.




– ராகவ்குமார்

படம் : ஸ்ரீஹரி



* டாக்டர் பி.ஆனந்தன்

**ப**யம், பதற்றம் ஆகியவை யாருக்கும் ஏற்படலாம். ஆனால், இந்த இயல்பான குணங்களைக் கூட நோய் என்று கருதி மருத்துவரிடம் செல்லும் மக்களும், நோய் என்று அதற்கு சிகிச்சை செய்யும் மருத்துவர்களும் அதிகரித்து வருகிறார்கள். இவை இயல்பான உணர்வுகளா, நோயா? உறுதி செய்துகொள்ள மனநல மருத்துவர் டாக்டர் பி.ஆனந்தனை அணுகினோம்.

பிரபல திரைப்படமான தெனாலியை எடுத்துக்கொள்வோம். அதில் இலங்கை வாழ் தமிழரான கமல், அங்கு நடைபெறும் யுத்தம், துப்பாக்கிச் சூடு, குண்டு வீச்சு ஆகியவற்றால் பாதிக்கப்பட்டு எல்லாவற்றுக்கும் பயம்கொள்ளும் நபர். இது Post - Traumatic Stress Disorder எனப்படும் ஒரு மனப் பதற்ற நோய் (Anxiety disorder).

பதற்றம் என்பது நோயா என்று கேட்டால் என் பதில் இதுதான்: பயம் என்பது ஓர் இயல்பான உணர்வு. பதற்றம் என்பதும் ஒரு குறிப்பிட்ட எல்லைவரை இயல்பான உணர்ச்சிதான்.

உதாரணமாக, ஒரு பெரிய நிறுவனத்தில் நேர்முகத் தேர்வுக்காகக் காத்திருக்கும்போது மிதமான பதற்றம் உண்டாவது இயல்பு. ஆனால், அந்த நேர்முகத் தேர்வு நடக்கும் முழு நேரமும் நாக்கு வறட்சி, வயிற்றில் பட்டாம்பூச்சி பறக்கும் உணர்வு, உடம்பெல்லாம் ஒரு நடுக்கம் என்று இருந்தால் அது ஒரு மனநோய்.

தனியாக அறையில் எழுதிக்கொண்டிருக்கும்போது, பாம்பு ஒன்றைப் பார்த்தால் பதற்றமாகிக் கூச்சல் போடுவது இயல்பு. ஆனால், பொதுவாக பாம்பு நடமாட்டம் இல்லாத பகுதியிலும் பாம்பு வந்துவிடுமோ என்ற பயத்தில், கதவு ஜன்னல்களையெல்லாம் அடைத்துக்கொண்டு வேலை செய்து கொண்டிருந்தால் அது நோய்.

**ம**னப் பதற்ற நோய்களில் பல வகைகள் உண்டு. சிலருக்குக் குறிப்பிட்ட தருணங்களில் மட்டுமே பதற்றம் ஏற்படும். பிறருடன் கலந்து பழக வேண்டும் என்ற நிலை ஏற்பட்டாலே பதற்றம் ஏற்படுவதை Social phobia என்பார்கள்.

மூச்சுத் திணறல் ஏற்பட்டு இறந்துவிடுவோம் என்று நினைத்து லிஃப்டில் ஏறாதவர்கள் உண்டு. மாத்திரை சாப்பிடுவது, ஊசி போட்டுக்கொள்வது என்பதற்கெல்லாம் பதறுவதும் மனநோய்கள்தான்.

குழந்தையுடன் விளையாடுதல், நாளிதழ் படிப்பது போன்ற சின்னச் சின்னச் சந்தோஷங்களைக்கூட சிலரால் அனுபவிக்க முடியாது. எப்போதும் ஒரு இறுக்கம், அமைதியின்மை, சீக்கிரம் உடல் சோர்வு அடைதல் என்று இருப்பார்கள். இவர்களுக்கு ஏற்பட்டுள்



இந்த உபாதைகள், இந்த அறிகுறிகள் இருந்தால் இந்த நோய் என, உலகம் முழுவதும் உள்ள மனிதர்களுக்கு நிரூபிக்கப்பட்ட உண்மைதான் மருத்துவ அறிவியல். அதே போல மனநல மருத்துவ அறிவியலும், உலகம் முழுவதும் உள்ள மனிதர்களை வைத்து நிரூபிக்கப்பட்ட உண்மைதான். எனவே, எல்லை தாண்டிய பதற்றம் அடிக்கடி ஏற்படும் போது மனநல மருத்துவரிடம் ஆலோசனை பெறுவதே புத்திசாலித்தனம்'' என்ற டாக்டரிடம், ''மனநல மருத்துவரை அணுகுவதற்கு முன் யோகா, தியானம் போன்றவற்றை முயற்சிப்பது நல்லது இல்லையா?'' என்று கேட்டோம்.

''நடைமுறையில் அது சாத்தியமில்லை. சொல்லப்போனால், பதற்ற நோய்களினால் பாதிக்கப்பட்டு என்னிடம் வருபவரிடம் 'ரிலாக்ஸாக இருங்கள். எதிர்மறையாக நினைக்காதீர்கள்' என்று சொன்னால் 'அதெல்லாம் எனக்கும் தெரியுது டாக்டர். நடைமுறையில்தான் கொண்டுவர முடியல' என்பார்கள். அவர்களது அதீத பதற்றத்துக்குக் காரணம் அவர்கள் மூளையில் உள்ள இரசாயனங்களில் உண்டாகும் சிக்கல்தான் (biochemical imbalance). எனவே, அதை உரிய மருந்துகளின் மூலம் ஓரளவு சரிசெய்துவிட்டு, அதற்கு அடுத்த நிலையில் வேண்டுமானால் யோகா, தியானம் போன்றவற்றில் ஈடுபடுவது சாத்தியமாகும்'' என விளக்கமளிக்கிறார் டாக்டர் ஆனந்தன்.

# மாத்திரை சாப்பிட பயமா?

# மனநோயாக இருக்கலாம்..!

ஸதை Generalised Anxiety Disorder என்போம்.

சிலருக்குத் திடீரென நெஞ்சு படபடக்கும்; வியர்வை பொங்கும்; இப்போது செத்துப்போய் விடுவோமோ என்ற எண்ணம்கூடத் தோன்றும். இவையெல்லாம் சில நிமிடங்களில் சரியாகி உடல் இயல்பு நிலைக்கு வந்துவிடும். இதற்கு மனநல மருத்துவம்தான் தீர்வு.

ஏற்கெனவே இதய நோய் அல்லது வேறு ஏதாவது உடல் கோளாறு காரணமாகப் படபடப்பு போன்றவை இருந்தால் அது வேறு விஷயம்.

**– ஜி.எஸ்.எஸ்**



# நாலு கம்பியும்..

"ஒவ்வொருத்தர்கிட்டயும் ஒரு திறமை இருக்குண்ணே. அதை சம்பந்தப்பட்டவங்க கண்டெடுக்கற வரைக்கும்தான் கஷ்டம் எல்லாம். அப்புறம் விடிவெள்ளி மொளைச்சா மாதிரி மேல வந்துதாண்ணே ஆகணும்'' என்று பாசமாகப் பேசும் கணேஷ், பல படங்களுக்கு ஆர்ட் அசிஸ்டெண்ட்டாகப் பணியாற்றியவர்.

''சொந்த ஊரு தமிழ்நாடுதாண்ணே. ஆனா குடியேறினது பெங்களூர்ல. அப்பா - அம்மா இல்ல. ரொம்பக் கஷ்ட ஜீவனம். சாப்பாட்டுக்கே உருண்டு பெரண்டிருக்கேன். ஏன், எதுக்குன்னு தெரியல... திடீர்னு ஒருநாள் எனக்குள்ள என்னமோ தோண, உட்கார்ந்து வரைய ஆரம்பிச்சுட்டேன். அப்பத்தான் உணர்ந்தேன், நமக்குள்ள ஏதோ ஒண்ணு ஒளிஞ்சிருக்குன்னு. மெல்ல மெல்ல அதை வெளில கொண்டு வந்து, நல்லா பழக்கப்படுத்திக்கிட்டேன். சரி, நல்லா வரைஞ்சேன். அதைய, வச்சுக்கிட்டு என்ன பண்றதுன்னு தெரியலண்ணே. யாரோதான் சொன்னாங்க... 'சினிமால போய்ச் சேரேண்டா'ன்னு. கப்புனு புடிச்சுக்கிட்டேன். அங்க இங்க அலைஞ்சு ஒரு ஆர்ட் டைரக்டர்கிட்ட அசிஸ்டெண்ட்டா சேர்ந்துட்டேன். கொஞ்ச நாள்லயே அவரோட குடும்பத்துல ஒருத்தரா பழகினேன். ஆனா, தொடர்ந்து என்னால அவர்கிட்ட பணிபுரிய முடியல. 'தமிழனுக்கு கர்நாடகத்துல என்னடா வேலை'ன்னு கொதித்தெழுந்த சில நல்ல உள்ளங்க, என்னை தமிழகத்துக்கே வெரட்டியடிச்சிடுச்சிண்ணே! அப்புறம் என்ன செய்ய? இங்க வந்து அவங்க இவங்களைப் புடிச்சு மறுபடி அசிஸ்டெண்ட் ஆர்ட் டைரக்டரா வேலைக்குச் சேர்ந்துட்டேன். அப்படியே நம்ம பொழப்பு ஓடிக்கிட்டிருக்குண்ணே'' என்று வேதனை கலந்த சிரிப்போடு கூறும்

# ஒரு ஒத்த ரோசாவும்!

கணேஷ், ஆர்ட் டைரக்ஷன் தொழில் தொடர்பான விஷயங்களையும் நம்மோடு பகிர்ந்துகொண்டார்.

“ஷூட்டிங் ஸ்பாட்டுக்கு வெரசா வர்றவங்கள்ல நாங்களும் உண்டுண்ணே. மறுநாள் எடுக்கப் போற காட்சி பத்தி மொத நாளே எங்களுக்குச் சொல்லிருவாங்க. பிறகென்ன? எல்லாரும் வர்றதுக்கு முன்னாடியே வந்து செட்டுப் போடுறது, படம் வரையறது, லொகேஷனை சீனுக்கு ஏத்த மாதிரி மாத்தறதுன்னு பல வேலைகளைச் செய்வோம். ஓவியத் திறமைதான் இந்த வேலைக்கு அடிப்படை. எந்த கலர் டிரெஸ்ஸுக்கு எந்த கலர் பேக்ரவுண்டு இருக்கணும்ங்கறதுல ஆரம்பிச்சு, தார் ரோடுக்குத் தங்க முலாமே பூசற வரைக்கும் எங்க டிபார்ட்மெண்டோட கை ரொம்ப நீளும்ணே. வளைச்சு வளைச்சு வேலை செய்வோம்; சலிப்பே வராது. ஒரு கட்டைல ஆணிய வெச்சுத்தான் அடிக்க வேண்டியிருக்கும். ஆனா அதுல உள்ள அழகியல வார்த்தையால விவரிக்க முடியாதுண்ணே. ‘சிறு துரும்பும் பல் குத்த உதவும்’னு சும்மா யாரும் சொல்லிட்டுப் போகல. எங்களுக்கு இந்தப் பழமொழி செமயா பொருந்தும். நாலு கம்பி போதும் ஜெயிலாக்க; ஒத்த ரோசா போதும் தோட்டமாக்க. விளையாட்டில்லண்ணே.... நெஜமாத்தான் சொல்றேன். நாலு ஆணி, ஒரு கோணி போதும்... ஒரு வீட்டையே கட்டி மேய்ஞ்சிடுவோம்.

**ஒரு கட்டைல ஆணிய வெச்சுத்தான் அடிக்க வேண்டியிருக்கும். ஆனா, அதுல உள்ள அழகியல வார்த்தையால விவரிக்க முடியாதுண்ணே!**



சினிமால எந்த வேலை செஞ்சாலும் யூனியன்தாண்ணே எஜமான். அவங்க அனுமதி இல்லாம, அதாவது கார்டு இல்லாம யாரும் வேலை செய்ய முடியாது. சாப்பாட்டுக்குப் பஞ்சம் இல்ல. சம்பளத்துக்கும் குறைச்சல் இல்ல. பொதுவா ஒளிப்பதிவாளரைச் சார்ந்துதான் எங்க வேலை இருக்கும். அவர் என்ன விரும்புறாரோ, அதை நாங்க கொடுத்துடுவோம். இந்த கெமிஸ்ட்ரி எப்பவாச்சும் சரியா ஒர்க் ஆவுட் ஆகாதபோதுதான் இலேசா உரசல் ஆரம்பிக்கும். அதுகூட தற்காலிகமானதுதாண்ணே. மத்தபடி எல்லாரும் தாயா புள்ளையா பழகுவோம்.

வேற மாதிரி ரிஸ்க் எங்களுக்குக் கொஞ்சம் ஜாஸ்திண்ணே. வேலைல ரொம்பக் கவனமா இல்லைன்னா டேன்ஜராயிடும். கட்டை, கல், மண்ணுன்னு கலைன்னாலே வலைல சிக்கிக்கிற மாதிரிண்ணே. உஷாரா செய்யணும்... அடிபட்டுச்சு, படுக்க வெச்சுடும். அப்புறம் தொழில்



மின்னல் கதை



## காலி பாட்டில்!

அ. யாழினி பார்வதம்

**ப**ள்ளிக்குக் கிளம்பிய மகனை "வாடா, சைக்கிளில் கூட்டிப்போய் விடுறேன்" என்றார் அப்பா. ஸ்கூல் பேக் வாங்கி ஹேண்ட் பாரில் மாட்டியபோது 'க்ளங்' என்றது. திறந்து பார்த்தால் உள்ளே நான்கைந்து காலி பாட்டில்கள்.

மகனைப் பளாரென அறைந்து "என்னடா இது?" என்றார்.

"எல்லாம் நீ வீட்டுல வாங்கியாந்து குடிச்சுட்டுப் போட்டதுதான்."

அப்பாவுக்குத் திக்கென்றது.

"பழைய பாட்டில் வாங்குற கடையில கொடுத்தா ஒரு ரூபாய்க்கு எடுத்துப்பாங்க. அந்தக் காசை உண்டியல்ல போட்டு வெப்போம். வீட்ல சோறு பொங்க அரிசி இல்லேன்னா அந்தக் காசுலதான் சமாளிப்போம்"

மகன் பேசப் பேச, அப்பாவுக்குப் பளாரெனத் திருப்பி அறைந்தது போலிருந்தது.

"காலி பாட்டிலை வித்தே கால் வயிறு கழுவ முடியுதுன்னா, நீ குடிக்குற காசை மிச்சப்படுத்தினா நம்ம குடும்பம் எம்புட்டுச் சந்தோஷமாயிருக்கும்." மகன் கேட்கவும், அப்பாவின் கண்களில் கண்ணீர்!

ரெண்டாம்பட்சமாகி, உடம்பு மொதபட்சமாயிடும். கலை, கிலையெல்லாம் போயி சிலை மாதிரி கெடக்க வேண்டியதுதான். எனக்கே ஒருமுறை 'பீஷ்மர்' படத்துல வேலை பார்க்கும்போது கால்ல ஆணி குத்தி, ஏகப்பட்ட இரத்தம் போயி ஒரே களேபரமாயிடுச்சு. சரியாக நாலஞ்சு மாசம் ஆச்சு. தனியாளுன்றதால நான் பட்ட தவிப்பு இருக்கே! என் எதிரிகூட படக் கூடாதுண்ணே! அப்புறம் சில நல்ல மனசுங்களாலதான் இப்ப உங்க முன்னாடி நின்னு பேசிட்டிருக்கேன்.

**ஒ**ரு படத்தோட மொத சீன்ல ஆரம்பிச்சு, முடியற சீன் வரைக்கும், ஆர்ட் டைரக்‌ஷனோட பங்கு அளப்பரியதுண்ணே. எந்த ஒரு ஆர்ட் டைரக்டரும் இதைப் புரிஞ்சுக்கிட்டுதான் எங்களை வேலை வாங்குவாங்க. அதனால மரியாதைக் குறைவெல்லாம் இருக்காது. உணர்வுபூர்வமாத்தான் பழகுவாங்க. தோள்ல கைபோட்டுத் தோழமையோடு இருப்பாங்க. பேட்டா, அது இதெல்லாம் வழக்கம்போல பாகுபாடு இல்லாம தருவாங்க. இன்னொருத்தரை ஒப்பிட்டுப் பேசி அங்கலாய்க்க மாட்டாங்க.

வேலை நேரம் ஜாஸ்தின்றதால குடும்பம் குட்டிப் பத்தி ரொம்ப யோசிக்க முடியாதுண்ணே. வேலைல வந்தா அதுதான் குடும்பம். வீட்டுக்கு எப்பப் போவோம்னு தெரியாது; ஆனா போய்டுவோம். வருமானத்துக்குக் குறை இல்லாம வண்டி ஓடுது. வெளி வேலை, அதாவது டெக்கரேஷன் மாதிரியெல்லாம் செஞ்சும் அப்பப்ப காசு பார்ப்போம். உழைக்கத் தயாரா இருக்கணும்ணே, அதுதான் விஷயம். மனசு எல்லாத்துக்கும் ரெடியா இருந்தா, மழைகூட நம்மள கேட்டுக்கிட்டுத்தாண்ணே பெய்ய ஆரம்பிக்கும்!"

- போகிற போக்கில் சொல்லிவிட்டு, ஒலித்த போனை எடுத்துப் பேச ஆரம்பித்துவிடுகிறார் கணேஷ். அர்த்தம் விளங்கி உணர்ந்துகொள்ள, நமக்குத்தான் சில நிமிடங்களாகின்றன.

சந்திப்பு: **மு.மாறன்**
படங்கள்: **ஸ்ரீஹரி**

**(நிறைந்தது)**

**தங்கள் முதியோர்களைப் பராமரிக்கப் பணம் கொடுத்தாலும் தகுந்த முதியோர் இல்லம் கிடைக்கவில்லையே என்று கவலைப்பட்டுக் கொண்டிருப்பவரா நீங்கள்?**

# JUST RELAX PLEASE!

**உங்களுடைய கவலையை சுகமாகப் பகிர்ந்து கொள்ள காத்திருக்கின்றது**

# SEA BRREEZE HOME FOR SENIOR CITIZENS

- ❋ அவரவர் விருப்பத்திற்குத் தகுந்தாற்போல் தனிநபர், தம்பதியர், பொது அறை வசதிகளும் உண்டு.
- ❋ நடமாட முடியாதவர்களையும் சேர்த்துப் பராமரிக்கின்றோம், தொலைக்காட்சி, பத்திரிக்கை, சுற்றுலா என பொழுதுப் போக்கு வசதிகளும் உண்டு.
- ❋ அவரவர் தகுதிக்குத் தகுந்தாற்போல் மாதக் கட்டணம், வருடக் கட்டணம், ஆயுள் கட்டண முறைகளில் சேர்த்துக் கொள்கின்றோம்.
- ❋ பசுமை, தூய்மையோடு 24 மணி நேர மருத்துவ சேவை, வாகன வசதி, பணியாளர் சேவையோடு காத்துக் கொண்டிருக்கிறோம்.
- ❋ சைவ உணவு

**மானுட சேவைக்குப் பேதமில்லை! மகிழ்வித்து மகிழ்வோம்!**

## ஸீ ப்ரீஸ் முதியோர் இல்லம்
## பாத்திமா டிரஸ்ட் (Regd)

24, M R.G. Nagar ஒக்கியம் பேட்டை, துரைப்பாக்கம், சென்னை - 600 096.
போன் : 2496 3949 செல் : 94440 21417. E-mail : fathimatrust@fathima syed.com

நன்கொடைக்கு வருமானவரி விலக்கு (80G Income Tax Exemption) உண்டு.

---



**பிரதி மாதமும் விஜயம்**

| |
|---|
| 1ந் தேதி–செகுந்திராபாத் (ஓட்டல் இராமகிருஷ்ணா) |
| 2,3,11,12,20,21,22,23,24ந் தேதி–பெங்களூர் (ஓட்டல் உட்லண்ட்ஸ் [illegible] எதிரில்) |
| 5ந் தேதி–திருச்சி (ஓட்டல் ரம்யாஸ்) |
| 6ந் தேதி–சேலம்(ஓட்டல் நேஷனல்) |
| 8ந் தேதி–மதுரை (ஓட்டல் செந்தூர்) |
| 13,14ந் தேதி–பாண்டிச்சேரி (ஓட்டல் ஜெயராம்) |
| 25ந் தேதி–வேலூர் (வசந்தபவன்) |
| 28ந் தேதி–கோயம்புத்தூர் (ஓட்டல் தமிழ்நாடு) |
| சென்னையில் 4,7,9,10,15,16,17,18,19,26,27,29,30,31 ஆகிய தேதிகளில் நேரில் சந்திக்கலாம் |
| இவர் தன்னுடைய வருமானத்தை கோயில் திருப்பணிக்காகவும், நூற்றுக்கணக்கான கோயில் கும்பாபிஷேகத்திற்காகவும் செலவு செய்யும் பரம்பரை ஜோதிடர் |

# ஜாதகமே தேவையில்லை நீங்களும் யோகசாலியாக வேண்டுமா?
# ஒயிட் & ஒயிட் VVMB

**நல்லப்பன் நீல்கண்ட சிவா** சொன்னது நடந்தது. நடராஜர் பத்து என்னும் பாடலை பாடிய சித்தர்வழி பரம்பரை ஜோதிடர் முனீஸ்வரர் அருள்வாக்கு சித்தர்

**நெ.32, மகாலட்சுமி தெரு, தி.நகர், சென்னை–17.**
**போன் : 044–24761913 செல்: 98412 94932, 94444 16854**

முனீஸ்வரர் அருளால் ஜாதகமே இல்லாமல் ஒருவருடைய முகத்தைப் பார்த்தும், கைரேகையைப் பார்த்தும், புகைப்படத்தை பார்த்தும், நடந்ததையும் நடக்கப் போவதையும், ஒளிவு மறைவு இல்லாமல் பளிச்சென்று பலன் சொல்லி அனைத்துப் பிரச்சினைகளையும், செய்வினை தோஷங்களையும், கிரக தோஷங்களையும் நிவர்த்தி செய்து அதிர்ஷ்டசாலி ஆக்குகிறார்.

**ராஜ் டி.வி. யில்** தினமும் காலை 6.50 மணிக்கு தோன்றுகிறார்

*கைரேகை, எண்கணிதம், வாஸ்து சாஸ்திரம், முனீஸ்வரர் அருள்வாக்கு சித்தரின் வாரிசு*



**நல்லப்பன் ராஜநந்திவர்ம சிவா, B.E., M.I.S.T.E., MBA., LLB.**

*முனீஸ்வரர் அருள்வாக்கு வாஸ்துசித்தர் அவர்களை அணுகி வாஸ்து முறைப்படி வீட்டை அமைத்தும், தொழில் நிறுவனத்தை வாஸ்து முறைப்படி அமைத்தும், அஷ்ட ஐஸ்வர்யம் பெற்று வாழ அணுகவும்.*

முகவரி: **நெ.32, மகாலட்சுமி தெரு, தி.நகர், சென்னை–17.**
**போன் : 044–24761913 செல்: 98412 94932, 94444 16854**
**செல்: 9841594931, 9841294933, 9884476529**

முனீஸ்வரர் அருள்வாக்கு சித்தரின் ஆசிபெற்ற **விஜய்யஸ்ரீ வீடியோ கவரேஜ்**
நெ.23, முதல் குறுக்குத் தெரு, அன்னைசத்யா நகர், பூத்தப்பேடு, இராமாபுரம், சென்னை–89.
போன்:044-24761913, செல்:9841594931, 98412 94933, 98844 76529

# வையத் தலைமை கொள்-1

விவேகானந்தர் கல்கத்தா நகரில் ஆன்மிகப் பணியாற்றிக்கொண்டிருந்த நேரம். துறவிகளுக்குச் சொத்து கூடாது என்றாலும், தன் குருநாதர் ராமகிருஷ்ண பரமஹம்சருக்கு, ஒரு கோயில் கட்ட வேண்டும் என்பது விவேகானந்தரின் ஆசை. அதற்காகப் பல இடங்களில் பேசி, நெடுநாள் சிறுகச் சிறுகப் பணம் சேர்த்து, கங்கைக் கரை அருகே பேலூரில் நிலம் வாங்கப்பட்டது. நிலம் கையகப்படுத்துவதில் சில சட்டச் சிக்கல்கள் வேறு. வக்கீல், நீதிமன்றம் என்று அலைந்து திரிந்து ஒரு வழியாய் நிலம் கைக்கு வந்தபோது, கல்கத்தா நகரைக் கொடிய பிளேக் நோய் தாக்கியது. விவேகானந் தரும் அவருடைய சீடர்களும் நிவாரணப் பணிகளில் ஈடுபட்டனர். ஒரு பெரிய கூட்டத்துக்கு நிவாரணப் பணிகள் செய்ய, பணத்துக்கு எங்கே போவது? துறவிகள் கையைப் பிசைந்து கொண்டு நிற்க, விவேகானந்தர் தயக்கமே இல்லாமல் சொன்னார்: 'நம் பேலூர் நிலத்தை விற்றுவிடுவோம்.' சீடர்கள் முகத்தில் ஈயாடவில்லை. 'எவ்வளவு கஷ்டப்பட்டு வாங்கிய நிலம்! இதை விற்பதா,

**நாட்டிலுள்ள பற்றாக்குறைக்கெல்லாம் ஆக்கபூர்வமான தலைமைப் பண்பு கொண்ட தலைவர்கள் பற்றாக்குறைதான் காரணம்.**

மீண்டும் வாங்க முடியுமா? ராமகிருஷ்ணருக்குக் கோயில் கட்ட முடியுமா?' என்று கேள்விகள் எழுந்தபோது, ''கோயில் கட்டுவதைவிட மக்கள் சேவையே முக்கியம்'' என்றார் விவேகானந்தர்! நல்லவேளையாக வேறு வகையில் நிதி திரட்ட முடிந்ததால் அந்தப் பேலூர் நிலம் தப்பிப் பிழைத்தது. இன்றும் ராமகிருஷ்ண மடத்தின் தலைமையகம் அங்கே செயல்படுகிறது. இப்படி, கையில் காசு இல்லாத இந்தத் தலைவரையும் மக்கள் மாபெரும் தலைவராக மதித்தார்கள்; இன்றும் மதிக்கிறார்கள். இதற்கெல்லாம் காரணம், விவேகானந்தரிடம் குடிகொண்டிருந்த தலைமைப் பண்புதான்.

"இன்று நம் நாட்டில் என்ன பற்றாக் குறை என்ற கேள்வியைக் கேட்டோமானால், தண்ணீர் பற்றாக் குறை, சில்ல



# ஆயிரத்தில்

றைப் பற்றாக் குறை, வேலைப் பற்றாக் குறை, உணவுப் பற்றாக் குறை, நல்ல சினிமா பற்றாக் குறை, ஏன் உண்மைக்கும் நேர்மைக்குமே பற்றாக்குறை... என பலவிதமான பதில்கள் வரலாம். நாட்டிலுள்ள பற்றாக் குறைக்கெல்லாம், ஆக்கபூர்வமான தலைமைப் பண்பு கொண்ட தலைவர்கள் பற்றாக் குறைதான் காரணம்.



இன்றைக்கு மீடியா வெளிச்சத்தோடு பவனி வரும் தலைவர்கள்தான் அதிகம். ஆனால், ஆட்சி மாறும்போது காட்சியும் மாறுகிறது. செல்வாக்குச் செல்லாக் காசாகிப் போகிறது. பதவி வேறு கைக்கு மாறிப்போனால் திரும்பிப் பார்க்கவும் ஆள் கிடையாது. ஆக, இன்றைய தலைவர்கள் பதவி பலத்தாலும், பண பலத்தாலும் சாதி மத 'வோட்டு வங்கி' பலத்தாலும் தங்கள் பின்னால் பெரிய கூட்டத்தைக் கூட்டுகிறார்கள். இப்படிப்பட்ட தலைமையிட மிருந்து, எப்படி ஆக்கபூர்வமான தலைமைப் பண்பை எதிர்பார்க்க முடியும்!

**உதயம் புதுத்தொடர்**

பதவியே இல்லாத ஒருவருக்கு மக்கள் கூட்டம் கூடச் சாத்தியமா? பண பலம் இல்லாமல் தொண்டர் படை அமையுமா? சாதி, மத பலம் இல்லாமல் கூட்டம் சேர்க்க முடியுமா? இதெல்லாம் நடக்கிற காரியமா என்றால், நடந்திருக்கிறது. ஒரு நூற்றாண்டுக்கு முன்னால் இந்த மண்ணில், தலைவர்களை அவர்களின் கொள்கைக் காகவும், அன்புக் காகவும் தலை மைப் பண்புகளுக் காகவும் மக்கள் நேசித்திருக்கிறார்கள்.

உலக சரித்திரத்தை எடுத்துப் பார்த்தால், ஜார்ஜ் வாஷிங்டன் அமெரிக்க விடுதலைப் போரைத் தலைமை தாங்கி நடத்தினார். அமெரிக்காவின் முதல் குடியரசுத் தலைவர் அவர்தான். சமீபத்தில் தென்னாப்பிரிக்கா விடுதலை இயக்கத்தை நெல்சன் மண்டேலா முன் நின்று நடத்தினார். அவரும் தென்னாப்பிரிக்காவின் குடியரசு தலைவராய் இருந்திருக்கிறார். எல்லா நாடுகளிலும் சுதந்திரப் போரை வழி நடத்திய தலைவர்தான். நாட்டின் உயர் பதவியை ஏற்றுக்கொண்டதாகச் சரித்திரம் சொல்கிறது. ஒரே ஒரு விதிவிலக்கு நம் நாட்டு காந்தி மட்டும்தான். சுதந்திர விழா கொண்டாடும் நேரத்தில், வங்காளத்தில் நடந்த இந்து - முஸ்லிம் கலவரங்களைச் சமாதானப்படுத்த அங்கே போய்விட்டார்! காந்தியின் இறுதியாத் திரையில் உலகத் தலைவர்கள் பலர் கலந்து கொண்டார்கள். அவருடைய ஆளுமைக்காக, தலைமைப்

சேவாலயா முரளிதரன் டாடா கன்ஸல்டன்ஸி சர்வீஸிஸ் நிறுவனத்தில் உயர்பதவி வகிப்பவர். சேவாலயா தொண்டு அமைப்பை நிறுவி உதாரண நிறுவனமாக உருவாக்கி, வளர்த்து வருபவர்.



# ஒருவன்!

**'சேவாலயா' முரளிதரன்**

பண்புக்காகக் கூடிய கூட்டம் அது. பல்வேறு உலக நாடுகள் அவர் தபால் தலையை வெளியிட்டுப் பெருமை பெற்றன. அவர் இறந்துபோய் அறுபது ஆண்டுகள் கழித்தும், அவர் பெயர் சொல்லித்தான் இங்கு அரசியல் நடத்த வேண்டியிருக்கிறது. இது அத்தனையும் எந்தப் பதவியிலும் இல்லாத ஒரு தலைவனுக்காக!



**பா**ரதி என்றாலே பலருக்கு நினைவுக்கு வருவது அவரது முறுக்கு மீசைதான். மீசை வைத்துக்கொள்வது ஒரு பெரிய விஷயமா என்றால், அந்தக் காலத்தில், அவர் பிறந்த சமூகத்தில் அது பெரிய புரட்சிதான். தேவையற்ற சட்ட திட்டங்கள் அனைத்தையும் மீறியதால், அவர் தன் சமூக மக்களால் தள்ளி வைக்கப்படும் நிலை ஏற்பட்டது. தாழ்த்தப்பட்டவனுக்குப் பூணூல் அணிவித்ததும், மனைவியுடன் கைகோத்து கிராம வீதிகளில் நடந்துபோனதும், சாதி பேதங்களைச் சாடியதும், பாரதியைச் சாதி பிரஷ்டம் செய்யத் தூண்டினவே தவிர, ஒரு சாதி வோட்டு வங்கியை உருவாக்கப் பயன்படவில்லை.

காந்தியும் விவேகானந்தரும், பாரதியும் நூறு ஆண்டுகளுக்கு முன்னால் வாழ்ந்தவர்கள். பதவி, பணம், சாதி பலம் எதுவும் இல்லாமலேயே நாட்டில் சிறந்த தலைவர்கள் என்று போற்றப்பட்டவர்கள். ''ஜெயிலுக்குப் போகத் தயங்காதே. சட்டப்படி அளிக்கப்பட்ட தண்டனையை ஏற்றுக் கொள்'' என்று சொல்லி அதன்படி நடந்து காட்டிய மகாத்மா இருந்த இடத்தில், இன்றைய தலைவர்கள் அடாவடியாகத் தொண்டர்களைச் சட்டத்தின் பிடியிலிருந்து விடுவிக்கும் காட்சியைப் பார்க்கிறோம். கஷ்டப்பட்டுப் பணம் சேர்த்து வாங்கிய நிலத்தை, பொது நன்மைக்காக விற்றுவிடத் தயாராக இருந்த விவேகானந்தர் இருந்த நாட்டில், சொத்துக் குவிப்பு வழக்கில் பல தலைவர்கள் பிடிபடுகிறார்கள்! தன் சாதி செய்த தவறுகளைச் சாட்டை அடி கவிதையால் விளாசிய பாரதி இருந்த நாட்டில், இன்று சாதிச் சங்கங்கள், சாதி அடிப்படை கட்சிகள்!

அரசியல் தலைவர்கள் மட்டுமே மாறினால் போதுமா? தலைமை என்பது எல்லா நிலைகளிலும் இருக்கும் ஒரு பதவி. ஒவ்வொரு குடும்பத்துக்கும் ஒரு தலைவன் - தலைவி தேவை. ஒவ்வொரு நிறுவனத்துக்கும் தலைவர்கள் தேவைப்படுகிறார்கள்.

சென்ற நூற்றாண்டின் தலைவர்களைப் போல் மீண்டும் பலர் எழ வேண்டுமானால், முதலில் அவர்களுடைய தலைமைப் பண்புகள் என்னவென்பதை ஆராய வேண்டும். காந்தி, விவேகானந்தர், பாரதியைப் போன்றோர் பணம், பதவி ஏதுமில்லாமல் இருந்தாலும், மக்களின் மரியாதையை, அன்பை, ஆத்மார்த்தமான வணக்கத்தைப் பெற்ற தலைவர்களாக ஆக, அவர்களுடைய குணநலன்கள் எவையெவை காரணமாக இருந்தன? இந்தத் தலைமுறை அவற்றைப் படித்துத் தெரிந்து கொண்டு நடக்க வழி இருக்கிறதா?

**(சுவாசிப்போம்)**





# 1500 கிலோ தங்கத்தில் அதிசயக் கோயில்!

* ஸ்ரீ லட்சுமி நாராயணி திருக்கோயில் - ஸ்ரீரம்...

நாளுக்கு நாள் தங்கத்தின் விலை எகிறிக்கொண்டிருக்க, அதெல்லாம் எங்களுக்கு ஒரு பொருட்டல்ல என்று, 1500 கிலோ தங்கத்தால் அம்மனுக்குக் கோயில் எழுப்பி இருக்கிறார்கள். சுமார் 300 கோடி செலவில் உருவாக்கப்பட்டிருக்கும் இக்கோயில் வேலூருக்கு அருகேயுள்ள திருமலைக்கோடி என்ற ஊருக்குப் பக்கத்தில், ஸ்ரீபுரத்தில் அமைந்திருக்கிறது. இங்கே தான், ஸ்ரீ லட்சுமி

நாராயணி தங்கக் கூரைக்குக் கீழே கொலு வீற்றிருக்கிறாள். நூறு ஏக்கர் நிலப்பரப்பின் நடுவே, தாமரைத் தடாகத்தில், தகதகக்கும் தங்கக் கோபுரங்களுடனும், தங்க மேற் கூரை, தங்க மண்டபம் என்று எங்கெங்கும் கனகம் ஜொலிக்க, தங்கத் தாரகையாக மின்னுகிறாள் நாராயணி. இந்தத் தங்கக் கோயிலின் பின்னணியில் ஓர் உத்வேக சக்தியாக இருப்பவர் 'சக்தி அம்மா ஸ்வாமிகள்'. இவர் ஸ்தாபித்த நாராயணி பீடம்தான், இந்தப் பிரமிப்பூட்டும் கோயிலைக் கட்டியிருக்கிறது.

**வே**லூரைச் சேர்ந்தவர்கள் நந்தகோபால் -ஜோதியம்மாள் தம்பதி. இவர்களது மகன் தான் சதீஷ்குமார். பிறக்கும்போதே, இவர் நெற்றியில் வைஷ்ணவ அடையாளமான நாமம் அழுத்தமாக இருந்திருக்கிறது. சிறு வயதிலிருந்தே படிப்பில் ஆர்வம் இல்லை. பள்ளிக்கு அனுப்பினால், எதாவது ஒரு கோயிலில் உட்கார்ந்திருப்பாராம். பெற்றோர்கள் கவலையுடன் ஒரு மகானிடம் சொன்னபோது, 'அவன் போக்கிலேயே அவனை விட்டுவிடுங்கள்' என்று அவர் கூறிவிட்டாராம். வீட்டிலிருந்து பத்து கி.மீ. தொலைவில் திருமலைக் கோடியில் உள்ள ஒரு புற்றுக்கோயிலில் சென்று அமர்ந்துவிட்டார் சதீஷ்குமார். அங்கு அமர்ந்து அவர் அருள்வாக்குச் சொல்லத் துவங்கியிருக்கிறார். சொன்னவை அனைத்தும் பலித்துவிட, ஏராளமான மக்கள் வரத்துவங்கினார்கள். அன்று முதல், சக்தி அம்மா என்றே மக்களால் அழைக்கப்படுகிறார். பக்தர்களில் வெளிநாட்டவர்களும் உண்டு. இந்த நிலையில் ஒரு நாள் அவர் பேருந்து ஒன்றில் அமர்ந்திருக்கும்போது, வானத்தில் அபய ஹஸ்தம் செந்தாமரையுடன் ஸ்ரீ நாராயணி காட்சியளித்திருக்கிறார். அன்று முதல் ஏதோ சக்தி, தன்னை வந்தடைந்திருப்பதை உணர்ந்து கொண்டார். புற்றுக்கு அருகில் சுயம்புவாக உருவான அம்மனுக்குக் கோயில் கட்டினார் சக்தி அம்மா. கூடவே, சமூகப் பணியாக பள்ளிகள், நர்ஸிங் பள்ளி, மருத்துவமனை என்று உருவாயின. மக்கள், திருமலைக் கோடிக்குத் திரண்டு வர வேண்டும் என்ற, அவரது ஆசையில் உருவானதுதான் ஸ்ரீநாராயணிக்குத் தங்கக் கோயில். சக்தி அம்மாவின் வெளிநாட்டுப் பக்தர்கள் தாராளமாகவே உதவ, 2001ல் பணிகளைத் துவக்கியிருக்கிறார்கள். 2007 ஆகஸ்டில் திருப்பணிகள் முடிந்து கும்பாபிஷேகம் நடந்திருக்கிறது.



# முழு சரணாகதி ஒன்றே முழுமையான இறைபக்தி. மக்களை அந்த வழியில் ஈடுபடுத்துவதே என் விருப்பம்!

முப்பத்தொரு வயதான சக்தி அம்மா, நாள் ஒன்றுக்கு ஒன்பது மணி நேரம் பூஜை யாகம் என்றுதான் இருக்கிறார். "கடவுளை அண்டுவதற்குப் பல வழிகள் சொல்லப் பட்டிருந்தாலும், பக்தி மார்க்கம்தான் சிறந்த வழி. முழு சரணாகதி ஒன்றே முழுமையான இறைபக்தி. மக்களை அந்த வழியில் ஈடுபடுத்துவதே என் விருப்பம்" என்கிறார் சக்தி அம்மா.

அதற்கு ஏன் தங்கக் கோயில் எழுப்ப



வேண்டும் என்றால், ''இன்றைய பொருளியல் உலகில் பணத்தைத் தேடி நிம்மதியிழந்து அலைந்து கொண்டிருக்கிறான் மனிதன். அவனை, கோயிலுக்கு இழுக்க வேண்டும் என்றால், அவன் ஆச்சர்யப்படும்படி ஏதாவது இருக்க வேண்டும். கசப்பு தடவிய இனிப்பு மாத்திரை போலத்தான் இதுவும். இப்போது தங்கக் கோயில் என்று மக்கள் ஆயிரக்கணக்கில் வருகிறார்கள். அவர்கள் பக்தி மார்க்கத்தில் ஈடுபடும் அளவுக்கு, ஆன்மிகச் சூழலை இங்கு ஏற்படுத்தி வைத்திருக்கிறோம்.''

ஒரு பக்கம் பசுமையான மலைத் தொடர்கள் தங்கக் கோயிலுக்குப் பின்னணியாக அமைந்து மனத்தை நிறைக்கின்றன. நுழைவாயிலில் இருந்து இருநூறு மீட்டர் தூரத்தில் நாராயணி சன்னதிக்குச் செல்லும் நட்சத்திரப் பாதை துவங்குகிறது. பாதையில் செல்லும்போதே சக்தி அம்மாவின் ஆன்மிக உபதேசங்கள் வரிசையாக, ஆங்காங்கே பலகைகளில் எழுதி வைக்கப்பட்டிருகின்றன. எல்லாமே மனிதனை நன்னெறிப்படுத்தி பக்தி மார்க்கத்துக்குத் தூண்டுபவைதான். பாதையைச் சுற்றிலும் பக்கத்திலும், சுமார் முப்பதாயிரம் மரங்கள் கண்களுக்குள் பசுமையை நிறைக்கின்றன. நட்சத்திரப் பாதையின் நடுவில் ஒரு வழி அமைக்கப்பட்டு, சன்னதிக்குச் செல்கிறது. தங்கக் கோபுரங்களின்மீது விழும் சூரியக் கதிர்களின் பிரதிபலிப்பில், சன்னதியைச் சுற்றியுள்ள தடாகத்தில், கோபுர பிம்பங்கள் மஞ்சளாகச் சலசலக்கின்றன. மூல ஸ்தானத்தில் வரலட்சுமி நாராயணி நம்மைப் பார்த்துப் புன்னகைத்தவாறு வீற்றிருக்கிறாள். நான்கு கைகளுள் இரண்டில் சங்கு சக்கரம், ஒரு கை அபய ஹஸ்தமாக ஆசீர்வதிக்க, மற்றொன்றில் செந்தாமரை. அந்த லட்சுமி கடாக்ஷத்தில் நனைந்துகொண்டே நிற்க வேண்டும் என்று மனது ஏங்குகிறது.

ஏழைகளுக்குத் திருமண உதவி, முதியோர்களுக்கு ஒய்வூதியம், பள்ளிக் குழந்தைகளுக்கு நிதி உதவி... என்று அரசு செய்யும் எல்லா உதவிகளையும், சத்தம் இல்லாமல் சக்தி அம்மாவின் நாராயணி பீடம் செய்து வருகிறது.

– ஸ்ரீநி

# 'ஏரோபேர்' கல்யாணம்!

● தி.ரங்கசாமி, ஸ்ரீரங்கம்

**உமக்கு 'டாக்டர் கிரேஸி' பட்டம் அளிக்கலாமா?**

அதுக்கு இப்ப என்ன அவசரம்? டாக்டர் பட்டத்தை மெதுவாகத் தாருங்கள். நான் பொறுமையோடு காத்திருப்பேன்-patient கிரேஸியாய்.

● என்.கோமதி, நெல்லை

**கிரேஸி தம்பி, உனக்கு ஒரு சவால்! முற்றுப்புள்ளி வைக்காமல் ஒரு பக்கக் கதை சொல்லு பார்க்கலாம்?**

நீங்க கொடுத்த சவாலை ஏற்று கதை எழுத ஆரம்பித்தேன் கோமதி அக்கா! அப்ப ஒரு கமா, காமாக எட்டிப் பார்த்து, 'நான் இல்லேன்னா கதை தொடராது' என்று பீத்திக்கிச்சு! அதுக்குப் பதில் சொல்வதற்குள் 'ஆச்சரியக்குறி' திடீரென்று அங்கு தோன்றி, 'நான் இல்லேன்னா உன் கதைல உப்பு சப்பு இல்லாம, சுவாரஸ்யம் போயிடும்' என்று மிரட்டியது. மேலே இருந்து 'மேற்கோள்குறி' குதித்து, 'உன் பலம் வசனம்; நான் இல்லேன்னா வசனம் எழுதிக் காட்ட முடியாது' என்று அடி மடியிலேயே கை வைத்தது. தன் தரப்பு நியாயத்தைச் சொல்ல 'அடைப்புக் குறி' என்னை வழி மறித்தபோது, 'முற்றுப்புள்ளி' பிரசன்னமாகி கூறுகெட்டக் குறிகளா! கிரேஸிக்கு கல்கி கொடுத்ததே இரண்டு பக்கங்கள்தான். இதுல கோமதி அக்கா ஆசைப்பட்டாங்களேன்னு ஒரு பக்கத்துக்குக் கதையைச் சொன்னா, கிரேஸியைக் கேளுங்கள் பகுதியே 'கேள்விக்குறி'யாயிடும். அந்தப் பகுதிக்கு முற்றுப்புள்ளி வெச்சாலும் ஆச்சரியப்படறதுக்கில்லை. 'அடக்'கமா' கம்முனு கெடங்க' என்று குறிகளின் சண்டைக்கு முற்றுப்புள்ளி வைத்தது.

● வள்ளிநாயகம், திருவண்ணாமலை

**அது என்ன சார் 'ஈகோ'?**

அகங்காரம் என்றும் இதைச் சொல்வதுண்டு. இதையே 'நான்' என்றும், அந்த 'நான் யார்' என்பதை விசாரித்துத் தேடிக் கண்டுபிடித்து, விடுதலை பெறச் சொன்னார் பகவான் ரமண மகரிஷி. ரமணர் தேடச் சொன்ன 'நான்' அதாவது 'ஈகோ', கலப்படமில்லாத சுத்தமான, ப்ளெய்ன் சுக்காரொட்டி 'பெட்டர் நான்'. நமக்கு இருக்கும் ஈகோ, கொழுப்புச் சத்து மாவினால் பிசைந்த 'பட்டர் நான்.'



படம் : சுந்தரம்

● அ.ராஜா ரஹ்மான், கம்பம்

**உலகம் நம் கையில் இருக்க என்ன செய்ய வேண்டும்?**

ப்ளாஸ்டிக் சர்ஜனிடம் சென்று கைரே

கையை அழித்துவிட்டு, அதற்குப் பதில் பூமத்திய ரேகையைப் போட்டுவிடச் சொல்லலாம்! வசதி இல்லாதவர்கள், வேறு வழியில்லை... கல்லாததைக் கற்க வேண்டும். கற்றது கையளவு, கல்லாதது உலகளவு.



● **மா.உலகநாதன், திருநீலக்குடி**

***ரோபோவுக்கும் மனிதனுக்கும் கல்யாணம் நடக்கப் போவதாமே... அப்படி நடந்தால்...?***

திருமணங்கள் லாபில் நிச்சயிக்கப்படும். 'ரோபோ கல்யாண வைரோபோகமே' என்று திருமணத்தன்று பாடுவார்கள். என்னதான் புதுமையாக இருந்தாலும், சம்பிரதாயத்தை ஒரேயடியாக மாற்றாமல் இருக்க, ரோபோவாகக் கணவன் இருப்பதுதான் பெட்டர். ரோபோதானே சொன்ன பேச்சைக் கேட்கும்! முதலிரவின்போது பால், பழத்துக்குப் பதிலாக, ரோபோ கணவனுக்கு, மனைவி தட்டு நிறைய chips தரலாம். கணவன் ரோபோ மெகா byteல் கடித்து மகிழ்வான். பேட்டரியை மறக்காமல் சார்ஜ் செய்துகொண்டிருந்தால், மனைவி ஆயுசு வரையில், தீர்க்கசுமங்கலியாக இருப்பாள்.

● **கா.சங்கர், சாலை அகரம்**

***பூக்களில் உங்களுக்குப் பிடித்தது ரோஜாவா? மல்லிகையா?***

எனக்குப் பிடித்த பூ சிரிப்'பூ'!

● **என்.காளிதாஸ், சிதம்பரம்**

***உங்களுக்குப் பிடித்த புத்தகம்?***

இப்போது செல் வந்துவிட்டதால், பல வீடுகளில் டெலிஃபோன் டைரக்டரி செல்லரித்துக் கிடக்கிறது. நான் குளிக்கப் போகும்போது, மறக்காமல் டெலிஃபோன் டைரக்டரியை பந்தோபஸ்தாக எடுத்துச் செல்வேன். பாத்ரூம் பக்கத்தில் உள்ள தோட்டத்திலிருந்து பறந்து வந்து திடீர் விமானத் தாக்குதல் செய்யும் in coming காலிகளான, வண்டு, கரப்பான் பூச்சி, வெட்டுக்கிளிகள்... என் கையில் இருக்கும் தடிமனான டெலிஃபோன் டைரக்டரியைப் பார்த்து, எங்கே அடித்துவிடுவேனோ என்று பயத்தில், சன்னமான குரலில் என்னைப் பார்த்து 'ஸாரி ராங் நம்பர்' சொல்லிவிட்டுப் பறந்துவிடும். தூங்கும்போது கெட்ட சொப்பனத்தால் தூக்கிவாரிப் போடுவதைத் தவிர்க்க, 'டன்லப்-இன்லோ'வுக்குப் பதிலாக 'டைரக்டரி-இன்லோவை'த் தலைகாணியாக வைத்துக்கொள்வேன். அனாவசிய கனவுகள் வராது. அப்படியே வந்தாலும் குழப்பமான காட்சிகள் எதுவும் இல்லாமல், வெறும் நம்பர்கள்தான் வந்துபோகும். சிலசமயம் கனவில் வீடியோ இல்லாவிட்டாலும், ஆடியோவாக கிராஸ்டாக் கேட்கலாம். காதில் பஞ்சை வைத்துக் கொண்டால் அந்த ப்ராப்ளமும் ஓவர். மங்களகரமான கனவுகள் பார்க்க ஆசைப்பட்டால் 'எல்லோ-பேஜஸை' பிரித்து வைத்துக் கொண்டு தூங்குவேன்.

●

கிரேஸியைக் கேளுங்கள்

# பழங்களுக்கு நடுவே

"ஏழெட்டு வருஷத்துக்கு முன்னாடி இது வெறும் சோளக் காடா இருந்துச்சு. திண்டுக்கல்லேர்ந்து டாக்டர் ஐயா வந்து வாங்கிப் போட்டார். வகைவகை யான பழ மரங்கன்னுகளைக் கொஞ்சம் கொஞ்சமா நட்டு வெச்சாரு. எங்களுக்கே ஆச்சரியமா இருந்திச்சு. இப்போ கன்னுங் கள நட்டு வெச்சு, பலனை எப்போ அடையறதுன்னு! இப்ப அவரோட தோட் டத்து உள்ளார சுத்தி வந்தா, எங்களுக்கே பிரமிப்பா இருக்கு!" என்கிறார் அன்பு பழத்தோட்டம் அருகே இருக்கும் காட்டுக்காரர்.

இப்படி சப்போட்டா, எலுமிச்சை, நெல்லி, பலா, அத்தி, சீதா பழ மரங் களையும், தென்னை, புளிய மரங்களைக் கொண்ட இந்த மாபெரும் பண்ணையை உருவாக்கியிருப்பவர்கள் டாக்டர் ராஜேஸ்வரன், டாக்டர் லெட்சுமி நேத்ரா தேவி தம்பதியர்.

"அந்தக் காட்டை அங்ஙன வாங்கிப் போடும்போது, இவருக்கு ஏன் இந்த வேண்டாத வேலைன்னு கோபம்கூட வந் துச்சு. சரி, ஏதோ ஒண்ணு நடக்கட்டும்னு நானும் அவரோட சேர்ந்து அதுல ஈடுபட் டேன். இப்ப இந்தப் பழத்தோட்டம் இந்த அளவுக்கு வளர்ந்திருக்கு" எனக் கூறுகிறார் நேத்ராதேவி. மார்க்சிய கம்யூனிஸ்ட் கட்சி யின் மூத்த தலைவர்களான உமாநாத்-பாப்பா உமாநாத் தம்பதியினரின் இரண் டாவது மகள் இவர்.

"தினமும் காலையும் மாலையும் தோட்டத்துக்குப் போயிடுவார். ஒவ்வொரு பழ மரத்தையும் கண்காணிப்பார். ஆஸ் பத்திரி மாதிரியே அங்கேயும் மரங் களுக்கு மருத்துவம் பார்ப்பார். 'பழங் கள்லதான் சத்துக்கள் நிறைய இருக்கு. மக்களுக்குச் சத்துள்ள நல்ல பழங் களை உற்பத்தி பண்ணித் தர்றதை நாம செய்யலேன்னா, வேற யாரு வந்து



# ஸ்டெதஸ்கோப்!

செய்யப் போறாங்க'ன்னு சொல்வார் என் கணவர்'' என்று புன்னகைக்கிறார் நேத்ரா தேவி.

''மருத்துவம் மாதிரி விவசாயமும் ஒரு விஞ்ஞானம்தான். பெரிய குளம்

"மக்களுக்குச் சத்துள்ள பழங்களை உற்பத்தி பண்ணித் தர்றதை டாக்டர் செய்யாம யார் செய்வாங்க?"

தோட்டக்கலைக் கல்லூரிப் பேராசிரியர் டாக்டர் அன்பு என்னோட வழிகாட்டி. மேலும், தோட்டக்கலை வல்லுநர்களின் ஆலோசனைப்படிதான் இந்தத் தோட்டத்தை அமைச்சருக்கேன். கடந்த ஆறு வருஷமா காட்டின கடின உழைப்போட வெளிப்பாடுதான் இந்தப் பழத்தோட்டம்.

அறுபது ஏக்கரிலும் பழ மரங்களைக் கலந்து பயிரிட்டிருக்கேன். இப்படி, பல பயிர்கள் செய்யறதால உரம் எடுக்கறதுல போட்டி இருக்காது. ஒரு மரத்துக்கு வர்ற நோய், இன்னொரு வகை பழ மரத்துக்கு வராது. ஐந்து இடங்கள்ல போர்வெல் போட்டிருக்கேன். சொட்டு நீர்ப் பாசனம். இந்த ஆறு வருஷ காலத்துல, போன வருஷத்துலேர்ந்துதான் எல்லா மரங்களும் பலன் கொடுக்க ஆரம்பிச்சிருக்கு. ஒவ்வொரு வகை பழ மரமும் ஒவ்வொரு சீசன்ல பூக்கும்; காய்க்கும். இதனால முந்நூத்து அறுபத்தஞ்சு நாளும் தினசரி ஏதாவது ஒரு வகைப் பழத்தை அறுத்துக்கிட்டே இருக்கலாம்.

இதெல்லாம் இல்லாம, ஒட்டுரகப் பழக் கன்றுகளையும் உருவாக்கிட்டு வர்றேன். எங்க தோட்டத்துல பாலூர் பலா, பண்ருட்டி பலாவைவிட ரொம்பச் சுவையா இருக்கும். தேசிய தோட்டக்கலை இயக்குநரகத்தின் அங்கீகாரம் பெற்று இயங்கி வரும் நர்சரி, அன்புத் தோட்டம் நர்சரி. இதில் நூறு பேருக்கு வேலை தர்றோம். இதுல கிடைக்குற ஆத்ம திருப்தி, வேற எதுலயும் கிடைக்கப் போறதில்லை!'' என்று மெய் மறந்து பேசுகிறார் டாக்டர் ராஜேஸ்வரன்.

செய்திச் சித்திரம் : ஸ்ரீஅரசு



**பா**கிஸ்தான், ஆஸ்திரேலியா, தென் ஆப்பிரிக்கா போன்ற அணிகளுடன் அடுத் தடுத்து இந்திய கிரிக்கெட் அணி ஆடவிருக்கிறது. அதற்கான முஸ்தீபுகள் என்று மைதானங் கள் துப்புரவாகின்றன. புற்களுக்கு நீர் பாய்ச்சப்படுகிறது. தினமும் பிட்சைக் கூட்டிப் பெருக்குகிறார்கள். ஆனால், கிரிக்கெட்டுக்கு உயிர் கொடுக்கக் கூடியவர்கள் ஆட்டக்காரர்கள் மீதான அக்கறையும், அவர்களுடைய வளர்ச்சிக் கான செயல்பாடுகளும் எங்குமே தென்பட வில்லை.

உதாரணம் அணித் தேர்வு. சேலஞ்சர் டிராஃபி நடத்தப்பட்டு, அதில் மிளிரும் வீரர்களுக்கு வாய்ப்பு என்ற பகிரங்க மாகவே அறிவிக்கப்பட்டது. ஆனால், அந்தப் போட்டியில் அதிக ரன்களைக் குவித்த பத்ரிநாத் முதல் ஆளாக இந்திய அணியிலிருந்து விலக்கப்பட்டுள்ளார். ஆனால், எந்த ஒரு சிறப்பான காரணமும் இன்றி ஷேவாக் திரும்ப அழைக்கப் பட்டுள்ளார். அவருக்கும் இந்தியாவுக்கும் நிறைய அதிர்ஷ்டங்கள் தேவைப்படுகின் றன. டிராவிட் விஷயத்தில் விளக்கெண் ணெய் மனோபாவம். மோசமாக ஆடி னார், அதனால் விலக்கினோம் என்று சொல்ல வெங்சர்க்காருக்குத் துணிவு இல்லை. ஆனால், கடந்த மூன்று தொடர் களில் டிராவிடின் பங்கு மிக மோசமாக இருந்ததால், அவரை நீக்கியது துணிச்ச லான முடிவு.

**பே**ட்ஸ்மேன்களுக்குப் பஞ்சமே இல்லாத நாடு இந்தியா. ஆனால், இப்போதைய இந்திய அணியின் பட்டியல் வேறு தோற்றத்தைக் கொடுக்கிறது. ஒரு வேளை எதிர்ப்புகளுக்குத் தலை வணங்கி மீண்டும் டிராவிட் அழைக்கப்படும் பட் சத்தில், 2003, 2007 உலகக் கோப்பைகளில் ஆடிய இந்திய அணிக்கும், இப்போதுள்ள அணிக்கும் பெரிய வித்தியாசங்கள் இருக் கப் போவதில்லை. கடந்த ஆறு வருடங் களில் இந்திய அணி உருப்படியாக ஒரு ஓபன ரையும், ஒரு மிடில் ஆடர் பேட்ஸ்மேனையும் கண்டெடுக்கவில்லை. பழைய பஞ்சாங்கம்



6

தொடரும்

## ச.ந.கண்ணன்

பேசிக்கொண்டே நாம் பல இளம் நட்சத்திரங்களைச் சுவருக்குப் பின்னால் மறைத்து விட்டோம். மும்பையைச் சேர்ந்த ரோஹித் சர்மா, குளிர்பானங்களும் கிளவுஸ்களும் எடுத்துச் செல்லவே தற்போதைக்குப் பயன்பட்டு வருகிறார். பத்ரிநாத், கொடுக்கப்பட்ட எல்லா வாய்ப்புகளிலும் ரன்களை அடித்துக் கொடுக்கிறார். சிறப்பாக ஆடுபவர்களுக்குப் பிரகாசமான வாய்ப்புண்டு என்கிற எந்த உத்தரவாதமும் இங்கு தென்படவில்லை.

**வே**கப்பந்து வீச்சாளர்களை ஆவென அசந்து பார்க்கும் சமூகம் நம்முடையது. லெக் ஸ்பின் போட்டுக்கொண்டிருந்த ஸ்ரீசாந்த், வேகப்பந்து வீச்சுக்கு மாறியதும் இதே காரணத்தினால்தான். ஆனால், தரம் என்று வருகிறபோதுதான் சிக்கல்கள் ஏற்படுகின்றன. தமிழகத்தைச் சேர்ந்த யோமகேஷ் கிடைக்கிற வாய்ப்புகளையெல்லாம் வீணாக்குவதில் மும்முரமாக இருக்கிறார். முனாவ் படேல் விரக்தியில் கோபம் கோபமாகப் பேட்டிகள் கொடுக்கிறார். வீணாக அம்பயர்களிடம் சண்டை போடுகிறார். ஜாஹீர்கான், ஆர்.பி.சிங்குக்குப் பிறகு ஒளியூட்டக்கூடிய விதத்தில் ஒரு பந்து வீச்சாளரும் இந்தியாவில் உருவாகவில்லை. ஸ்பின் துறையில் இத்தனை தலைவலிகள் கிடையாது. முரளி கார்த்திக், முரளிதரன் போல பொறுப்புடன் பந்து வீசுகிறார். ஹர்பஜனின் மறுவாழ்க்கை நம்பிக்கையூட்டக்கூடியதாக இருக்கிறது. பதின்பருவத்தைச் சேர்ந்த பியூஷ் சாவ்லா, இந்த வயதுக்குள் உலகின் தலைசிறந்த பேட்ஸ் மேன்களுக்கெல்லாம் தலைவலியாக இருக்கிறார்.

டிசம்பர் மாதத்தில் இந்தியா, ஆஸ்திரேலியா செல்வது பற்றி இப்போதிருந்தே பேசத் தொடங்கிவிட்டார்கள். ஆனால், ஆஸ்திரேலியாவை வீழ்த்துவதற்கான ஆசையோ, நம்பிக்கையோ இந்திய அணிக்கு இருப்பதாகவே தெரியவில்லை. அணித் தேர்வுகளிலும், அடிப்படைக் கற்றறிதல்களிலும் நாம் முழுமையான தேர்ச்சி பெறும்வரை ஏமாற்றங்களும் கவலைகளும் தொடர்ந்துகொண்டுதானிருக்கும். ●



# ஏமாற்றங்கள்...!



# 70லிருந்து 7 வரை...

அரும்பு -புதுத் தொடர்

இந்தக் கட்டுரைகளின் தொகுப்புக்கு 'எழுபது முதல் ஏழு வரை' என்பதாக தலைப்பு தரத் தீர்மானித்த மறுகணமே பழைய நிகழ்ச்சி ஒன்று நினைவுக்கு வந்தது.

1952ல் ராஜாஜி சென்னை மாகாணத் தின் முதல் மந்திரியாகப் பொறுப்பேற் றார். அப்போது அரசாங்கம் அவர் உபயோகத்துக்கு என்று புதிய மோட்டார் கார் ஒன்று வாங்கியது. ரொம்பச் சின்ன தாகவும் இன்றி, கப்பல் மாடலாகவும் இல்லாமல் நடுத்தரமான ஒரு காரைத் தேர்வு செய்தார் ராஜாஜி. புதிய மாடல் Vauxhall என்பதாக நினைவு. ஆர்.டி.ஓ. அலுவலகத்தில் நம்பர் வாகனங்களுக்குத் தொடங்க இருந்த தருணம் அது. முதலமைச்சர் என்பதால் அவர் வாகனத்துக்குப் பொருத்தமாக ஒன்று (1) என்ற எண்ணை ஒதுக் கினார்கள்.

ராஜாஜிக்கு இது தெரிய வந்தபோது, எந்த மோட்டார் வாகனத்திலும் 'நம்பர் பிளேட்டில் நான்கு இலக்கங்கள் இருப் பதே நல்லது. 0001 என்று நம்பர் பிளேட் எழுத வேண்டும்' என்று சொன்னார். அதன்படியே காரியம் நடந்தது. இந் நாளில் 0034, 0482 என்றெல்லாம் நம்பர் பிளேட் எழுதப்படுவதை சர்வசாதாரண மாகக் காண்கிறோம். இதை நடைமுறைக் குக் கொண்டு வந்தவர் ராஜாஜிதான்.

இதைத் தொடர்ந்து ஒரு வேடிக்கை யான சம்பவம் நடந்தது. ஒருநாள் மாலை ரயிலேற எழும்பூர் ரயில் நிலையம் சென்றார் ராஜாஜி. ஸ்டேஷனையொட்டிய நாற்சந்தியில் பணியாற்றிக்கொண்டிருந்த ஒரு டிராஃபிக் கான்ஸ்டபிள், மோட்டார் கார் நம்பரைப் பார்த்தார். உடனே, விசில் கொடுத்து வண்டியை நிறுத்தி, ''என்ன மேன், நெம்பர் பிளேட்டைத் தலைகீழா மாட்டிக்கிட்டுப் போறே!'' என்று அதட்டினார்.

அந்த நாளில் முதலமைச்சர் எங்கு சென்றாலும் பெரிய சைனியம் போல முன்னும் பின்னும் இருபத்துநான்கு கார்களில் பலர் செல்ல மாட்டார்கள். சிவப்பு விளக்கு, சைரன் எதுவும் கிடை யாது. ராஜாஜிக்குப் பின்னால் ஒரே ஒரு ஜீப் மட்டுமே வந்தது.

புதிய ஸீரியல் **அனுபவ விருந்து**

# கல்கி ராஜேந்திரன்

ராஜாஜியின் அந்தரங்கக் காரியதரிசி காரில் முன் ஸீட்டில் அமர்ந்திருந்தார். அவசரஅவசரமாகக் கீழே இறங்கினார். அவர் பெயர் கிருஷ்ணமூர்த்தி என்பதாக ஞாபகம். ''சீஃப் மினிஸ்டரின் கார் அப்பா இது'' என்று அவர் கூறி முடிப்பதற்குள் ஜீப்பிலிருந்து இன்ஸ்பெக்டர் பரபரப்புடன் இறங்கி வந்து, தாட் பூட் என்று அதிகாரம் பண்ண ஆரம்பித்தார். அந்த டிராஃபிக் கான்ஸ்டபிள் நடுங்கிப் போனார்.

இதற்குள் ராஜாஜி ஜன்னல் கண்ணாடியை இறக்கி, 'என்ன விஷயம்' என்று கேட்டுத் தெரிந்துகொண்டார். ''அவரை விட்டுடுங்க; அவர் பெரிய தப்பு ஏதும் பண்ணிடலை. நம்பர் பிளேட் இப்படி எழுதப்படறது எல்லாருக்கும் பழகக் கொஞ்ச நாள் ஆகும். ரயிலுக்கு நேரமாகிறது; புறப்படுங்க'' என்றார்.

கார் மேலே சென்றது.

'எழுபது முதல் ஏழு வரை' என்று தலைகீழாகத் தலைப்பு தந்துவிட்டேனோ என்று பலருக்குத் தோன்றக்கூடும். ஆனால், திட்டமிட்டுத்தான் இந்தத் தலைப்பு தந்திருக்கிறேன்.

எனக்கு அறுபது வயது நெருங்கும்போதே என் மாமனார் சதாசிவம் அடிக்கடி கேட்பார் : ''நீ எப்போ ரிடையர் ஆகி என்னோட சீட்டாட வரப் போறே?''

நானும் ஒவ்வொரு முறையும் ''ஆகட்டும்'', ''ஆகட்டும்'' என்று சொல்லிச் சொல்லியே காலத்தைக் கடத்தி வந்தேன்.

ஒரு வழியாக எழுபதாவது வயதில், 'இதற்கும் மேல் சுமைகளைத் தாங்கிக்

*"என்னோடு சேர்ந்து பெரியோர் பலருடன் பழகும் நல்வாய்ப்பும் பெற்றுள்ள என் வாழ்க்கைத்துணை விஜயாவும் பல சம்பவங்களை நினைவு கூறுகிறாள்"*




* ராஜாஜி


* டி.கே.சி.


* சதாசிவம்


* எம்.எஸ்.சுப்புலட்சுமி

கொண்டிருக்க முடியாது' என்ற எண்ணம் தோன்றி, வேலையில் அலுப்பும் சலிப்பும் உண்டாயிற்று. இனியும் பதவியில் நீடிப்பது நிறுவனத்துக்குச் செய்யும் துரோகம் என்று கருதி, பணி ஓய்வு பெற்றேன். ஆனால், அப்போதும் மாமனாருடன் சீட்டாட முடியவில்லை. அவர் காலமாகிப் பல ஆண்டுகள் சென்றுவிட்டிருந்தன.

சீட்டாட முடியாததாலோ, முக்கிய அலுவல் ஏதும் இல்லாததாலோ அல்லது வயது காரண மாகவோ அடிக்கடி பழைய ஞாபகங்கள் வருகின் றன. இன்றைக்கு நடக்கும் ஒரு சம்பவம் பழைய நினைவுகளைக் கிளறுகிறது. அவற்றுள் பல சுவாரஸ்யமானவை. பெரிய மனிதர்கள் சம்பந்தப் பட்டவை. 'அவற்றைத் தொகுத்து எழுதினால் என்ன?' என்ற எண்ணம் தோன்றியது. அதன் விளைவுதான் இந்தக் கட்டுரைகளின் தொகுப்பு.

இது சுயசரிதம் அல்ல. இறைவன் அருளால் கல்கி அவர்களின் மகனாகப் பிறந்து, ராஜாஜி, டி.கே.சி., எம்.எஸ்., சதாசிவம் போன்ற பல பெரி யோர்களுடன் பழகுவதற்கு வாய்ப்புக் கிட்டியது. இந்தக் கட்டுரைகள் அவர்களைப் பற்றியும் வேறு பல பிரபலங்களைக் குறித்தும் சம்பவங்களைத் தாங்கி எழுதப்படுகின்றன. அவர்களுடைய சாதனை களை வருஷக்கிரமமாகப் பட்டியலிடும் வாழ்க்கை வரலாறுகள் அல்ல; சிறிய சிறிய நிகழ்ச்சிகள்தாம். ஆனால், அந்த மாமனிதர்களின் குண இயல்புகளை உணர்த்தும்; படிப்பவர்களின் உள்ளங்களை உயர்த்தும்.

எனது இந்த முயற்சியில், பொன்விழா காலமாக எனது வாழ்க்கைத் துணையாக இருந்து, பெரியோர் பலருடன் பழகும் நல்வாய்ப்புப் பெற்றுள்ள விஜயா வும் பல சம்பவங்களை நினைவு கூர்ந்து, பங்கேற்று மகிழ்கிறாள்.

நீதிமன்றத்தில் சாட்சி சொல்பவர்கள், 'நான் கூறுவது உண்மை; முற்றிலும் உண்மை; உண்மை யன்றி வேறில்லை' என்று சத்யப் பிரமாணம் செய் வார்கள். நானும் அப்படியே உறுதியளிக்கிறேன். ஆனால் ஒன்று, சில சம்பவங்களில் சில பெயர்கள் விடுபட்டுப் போயிருக்கும். காரணம், அந்தச் சம்ப வம் அந்தப் பெயருடையவருக்குப் பெருமை சேர்ப்ப தாக இராது. அனாவசியமாக ஒருவர் உள்ளத்தை அல்லது, அவர் காலமாகிவிட்டிருந்தால், அவர் சந்ததியினரின் மனங்களைப் புண்படுத்துவானேன்?

**(பேசுவோம்)**

# கருணை விழிகள்

## சுதா சேஷய்யன்

### ஸ்ரீ லலிதா - இரண்டாம் பாகம் -8

பார்வதியாகவும் பத்மநாப சகோதரியாகவும் இருக்கக்கூடிய அம்பாள் பத்ம நயனாவாகவும் இருக்கிறாள்.

**பார்வதி** என்கிற திருநாமத்தையும் **பத்ம நயனா**வையும் சேர்ப்பதில் ரொம்ப விசேஷம் இருக்கிறது.

பார்வதி என்கிற ஸ்வரூபம் எப்படி என்றால் கரிய திருமேனி படைத்த ஸ்வரூபம். மலைமகள் என்று சொல்கிறபோது கரிய திருமேனி படைத்தவள். அதே சமயத்தில், அவளுடைய கண்கள் செம்மையான கண்கள். அந்தச் செம்மைக்கு என்ன காரணம் என்றால், தன்னுடைய குழந்தைகள் நன்றாக இருக்க வேண்டுமே என்கிற உணர்வு ஓடுகிற கண்கள்.

கருணையால் சிவந்த கண்களும் கரிய திருமேனியும் படைத்தவளாக ஒரே திருவவதாரத்தில் அவள் இருப்பதைச் சொல்வதற்காகத்தான் பார்வதி - பத்ம நயனா.

**பத்மராக ஸமப்ரபா** - இது அடுத்த நாமம். பத்மராகம் என்பது புஷ்பராகம் மாதிரி ஒரு பெரிய நவரத்தினம். அந்தப் பத்மராகம் எவ்வளவு பிரகாசம் தருமோ, அவ்வளவு பிரகாசத்துக்குச் சமமாக ஜொலிப்பவள்.

**பஞ்சப்ரேத ஆஸன ஸீனா** - பஞ்ச பிரேதாஸனத்தில் அமர்ந்திருக்கக் கூடியவள். இதை ஏற்கெனவே பார்த்திருக்கிறோம். - பஞ்சபிரம்மாஸனம், பஞ்சப்ரேதாஸனம் இரண்டையும் அலங்கரிப்பவள்.

அடுத்தது **பஞ்சபிரம்மஸ்வரூபிணி.** இந்த இரண்டு திருநாமங்களுக்கும் வித்தியாசம் இருக்கிறது.

பஞ்சபிரேதஸ் மேல் அமர்ந்திருக்கிறாள். அதனால் பஞ்சாஸனமாகி விடுகிறது. ஆனால் பஞ்சபிரம்ம ஸ்வரூபிணியாக இருக்கிறாள். என்ன வித்தியாசம்?

பஞ்ச பிரேதஸ் என்பது அந்த ஐந்து பேர் பிரம்மா, விஷ்ணு, ருத்ரன், மகேசுவரன், சதாசிவன். நான்கு பேர் கட்டில் கால்கள், அதன் மேல் இருக்கக்கூடிய சதாசிவ பீடம். அந்தப் பீடத்தில் வீற்றிருக்கும் அம்பாளுடைய சக்தி இல்லையென்றால் அது வெறும் பிரேதமாக இருக்கும். ஆனால் அம்பாளுடைய சக்தி அதற்குள் இருந்து இயங்க வைத்தால் அதுவே அசையக்கூடிய, இயங்கக்கூடிய, உயிர்ப்போடு இருக்கக்கூடிய பஞ்ச பிரம்மம்.

### எட்டுத் திருநாமத் தொகுப்பு

இதற்கப்புறம் வருகிற ஒரு பகுதி திருநாமங்கள் - 256-ஆவது திருநாமத்தில் ஆரம்பித்து 263-ஆவது திருநாமம் வரைக்கும் ஒரு தொகுப்பு. எப்படி பண்டாஸுரன் கதையை விவரிக்கும் திருநாமங்கள் ஒரு தொகுப்போ, அந்த மாதிரி இது இன்னொரு தொகுப்பு.

சாதாரணமாக நாம் தூங்குகிறபோது இரண்டு விதமான தூக்கம் வரும். ஒரு தூக்கம் கனவோடு வரும்; இன்னொரு தூக்கம் கனவே இல்லாமல் வரும். மிக ஆழ்ந்த தூக்கமாக இருந்தால் கனவே வராது. அரைகுறை தூக்கத்திலேதான் கனவு வரும். இந்த அரைகுறை தூக்கத்திலிருந்து

தான் ஒருத்தரை எழுப்புவதும் கஷ்டம். ஆழ்ந்த தூக்கத்திலிருந்து எழுப்பிவிடலாம். ஆனால், அரைகுறை தூக்கத்தில் எழுப்புகிறபோது எழுந்திருக்கத் தோன்றும்... கண்ணைத் திறக்கலாமா என்று தோன்றும். ஆனாலும் யாரோ பிடித்து அழுத்துகிற மாதிரி இருக்கும் - இதுதான் ஆழமான தூக்கத்துக்கும் அரைகுறை தூக்கத்துக்குமான வித்தியாசம். விஞ்ஞான ரீதியாகவே இதைப் பார்க்கலாம்; நன்றாகத் தெரியும். ஆழமில்லாமல் தூங்கிக் கொண்டிருக்கிற நிலைமையில், தூங்குபவர் மனத்திலே என்ன ஓடுகிறது என்பதை, அவருடைய கண்களைப் பார்த்தால் தெரிந்து கொள்ளலாம். கண்கள் மூடியிருந்தாலும் இமைகள் துடித்துக் கொண்டிருக்கும். இதை விஞ்ஞானம் 'rapid eye movement sleep'என்று சொல்கிறது.

சாஸ்திரப்படியும் இந்த நிலை ஆன்மாவின் ஒரு வகையான நிலை என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இந்த ஆன்மா என்ன பண்ணுகிறது...? உடம்புக்குள்ளே வந்து உட்கார்ந்து கொண்டிருக்கிறது. அது எங்கேயிருந்து வந்தது என்றால் பரமாத்மாவிடமிருந்து வந்த சித் ஸ்வரூபம்தான் அது. அப்படி சித் ஸ்வரூபமாக அது இருந்தாலும், வந்து உட்கார்ந்த இடத்தின் சம்பந்தம் கிடைத்ததனாலே, அதை வைத்துக் கொண்டே எல்லாவற்றையும் பார்ப்பதற்கு அதற்குத் தோன்றுகிறது. தான் சித் என்பதும் ஆத்மாவினுடைய சிறிய துளி என்பதும் அதற்கு மறந்துபோய் விடுகிறது. வந்து உட்கார்ந்ததுமே, சுற்றி இருக்கிற விஷயங்கள், இந்த உடம்பு, அதன்மேல் இருக்கக்கூடிய அபிமானம் என்று எல்லாம் சேர்கிறபோது, உலகத்தில் எதைப் பார்த்தாலும் அதை உடம்போடு பொருத்திப் பார்க்க ஆரம்பிக்கிறது இந்த சித் ஸ்வரூபம்! இப்படி உடம்போடு பொருத்திப் பார்க்கும் தன்மையை ஆத்மா பெறுகிறதே, அதுதான் அதன் முதல் நிலை. பிறப்பினுடைய முதல் கட்டம்.

இந்தக் கட்டத்தில் அது என்ன பண்ணும் என்றால், எதைப் பார்த்தாலும் தானும் அதை அனுபவிக்க ஆசைப்படும். உடம்பின் மீது அபிமானம் வைக்கும். எங்கே போனாலும் சரி, யாரோடு பழகினாலும் சரி, 'உடம்புக்கு ஏதேனும் ஆகிவிடுமோ, அடிபட்டு விடுமோ' என்கிற கவலையுடனேயே இருக்கும். இந்த நிலைமைக்குத்தான் ஜாக்ரத நிலைமை என்று பெயர். விழித்துக் கொண்டிருக்கக்கூடிய நிலைமை; தன்னைச் சுற்றியுள்ள பொருட்களோடு உறவாடுகிற நிலைமை.



## இரண்டாவது நிலை

இந்த ஜாக்ரத நிலைமைக்கு அடுத்ததாகக் கொஞ்சம் மேலே போனால், கனவு நிலைமை. ஓரிடத்திலிருந்து நாம் நடந்து வீட்டுக்குப் போகிறோம் - அந்தச் செயல் ஜாக்ரதை நிலைமை என்றால், வீட்டுக்குப் போய்த் தூங்குகிறபோது கனவு வருகிறது.

கனவிலே, நாம் நடந்து வந்த வழி தெரிகிறது. 'ஐயோ! இருட்டிலே திரும்புகிறோம்' என்கிற உணர்வு வருகிறது திடீரென்று. அப்படிப்பட்ட சமயத்தில் நமது உடம்பு அந்த அனுபவத்தில் ஈடுபடாவிட்டாலும், தூக்கத்திலிருந்தாலும் - மனம் ஏதோ ஒரு வகையில் அதை அனுபவிக்கிறது. நடப்பது நிஜம் மாதிரியே இருக்கிறது; ஆனால் நிஜம் இல்லை. இந்த நிலையை ஸ்வப்னா நிலைமை என்று குறிப்பிடுகிறது சாஸ்திரம்.

## மூன்றாம் நிலை

இதற்கு அடுத்த நிலைமை என்னவென்றால், நல்ல ஆழ்ந்த தூக்கம் என்று வைத்துக்கொள்வோம். எனக்கு ஒன்றுமே

ஆத்மாவுக்கு ஈசுவரன் என்று பெயர். இந்த நிலைமையில் உடலும் எதையும் அனுபவிக்கவில்லை; மனகம் எதையும் அனுபவிக்கவில்லை பகவானுக்குப் பக்கத்திலே போயாயிற்று.

தெரியாது; என்ன நடந்ததென்றே தெரியாது. அப்போது இந்த உடல் எதையும் அனுபவிக்கவில்லை. மனமும் எதையும் அனுபவிக்கவில்லை. இந்த மாதிரியான நிலைமை, பகவானுக்கு ரொம்பப் பக்கத்திலே போய்விட்ட ஒரு நிலைமை. இப்படிப் போய்விடக் கூடிய நிலைமைக்குத்தான் சுசுக்தி என்று பெயர்.

## நான்காம் நிலை

சுசுக்தியையும் தாண்டிப் போய்விடக் கூடிய நிலைமைதான் துரியம். துரியம் என்றால் நான்காவது என்று அர்த்தம். நான்காவதாக இருக்கக்கூடிய இந்த நிலைமையில் ஆத்மா என்ன பண்ணுகிறது... சுற்றியிருப்பதையெல்லாம் விட்டுவிட்டு பகவானுக்கு அருகிலே போய்விடுகிறது. பகவானுடன் கிட்டத்தட்ட பாதி ஐக்கியமாகிவிடுகிறது.

## ஐந்தாம் நிலை

துரியத்துக்கும் மேலே ஐந்தாவது நிலை என்னவென்றால் துரியாதீதம். - துரிய அதீதம்! பரமாத்மாவுடன் முழுக்க முழுக்க முழுக்கப் போய் ஐக்கியமாகி விடக்கூடிய நிலைமை இது.

ஆன்மாவானது இந்த நான்கு கட்டங்களிலும் பயணம் செய்து ஐந்தாவது நிலையை எட்டுவதுதான் ஆத்மாவினுடைய பயணம்-நோக்கம்.

ஜீவனானது இவற்றுள் முதல் கட்டத்தில் உலகில் இருக்கக்கூடிய விஷயங்களோடு உறவாடுகிற நிலைமை இருக்கிறதே, விஸ்வத்தில் இருக்கும் அனைத்துடனும் தொடர்பு வைத்துக் கொள்ளும் நிலைமை - இந்த நிலைமையிலுள்ள ஆத்மாவுக்கே விஸ்வன் என்று பெயர்.

ஸ்வப்ன நிலைமை என்பது ஏதோ கொஞ்சம் அனுபவித்த மாதிரியும் இருக்கும். ஆனால் எழுந்து பார்த்தால் ஒன்றும் புரியாது. இரண்டுங்கெட்டான் நிலைமை. இந்த நிலைமையிலே ஆத்மாவுக்கு தைஜஸன் என்று பெயர்.

இதற்கு அடுத்ததான நல்ல ஆழ்ந்த தூக்க நிலைமையில் - மூன்றாவதான சுசுக்தி நிலையில் - ஆத்மாவுக்கு ஈசுவரன் என்று பெயர். இந்த நிலைமையில் உடலும் எதையும் அனுபவிக்கவில்லை; மனகம் எதையும் அனுபவிக்கவில்லை. பகவானுக்குப் பக்கத்திலே போயாயிற்று. மனகம் இந்த்ரியங்களும்தான் நம்மைக் கீழே கட்டிப் போடுகின்றன. பாசத்தோடு ஜீவனைப் பந்தப்படுத்துகின்றன. அந்தப் பாசத்தை வெட்டிப் போட்டு விடுபட்டு, சுதந்திரம் அடையக்கூடிய முக்தி நிலையில் தான் ஆத்மாவை ஈசுவரன் என்பார்கள்.

இதற்கு உயர்ந்த நிலை இருக்கிறதா என்றால், இன்னும் இரண்டு நிலைகள் உள்ளனவே அவற்றைத் தொடர்ந்து பார்ப்போம்.

(வளரும்)

* தந்திரக் கோட்பாடு! * சன்னின் இருட்டடிப்பு! * தார்மிக எதிர்பார்ப்பு!







● எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்

*? உயிருக்குப் பயப்படும் அரசியல்வாதிகள் வீட்டிலேயே இருந்துகொள்ளலாம் என டெல்லி உயர்நீதி மன்றம் கூறியிருப்பது நியாயம்தானே?*

! எனக்கு அப்படித் தோன்றவில்லை. வீட்டிலேயும் வன்முறை வெடிக்கக்கூடிய அளவில், பயங்கரவாதம் முற்றியுள்ள இந்தக் காலத்தில் தலைவர்களுக்குப் பாதுகாப்பு தேவைதான். ஆனால், பயங்கரவாதத்துக்கு இடமின்றி மக்களை அரவணைத்து வழிநடத்திச் செல்லக்கூடிய அரசியல்ஞானிகள் அதைவிடவும் அவசியத் தேவை.

● வீ.முத்தையா, திருநெல்வேலி

*? அனைத்து மக்களுக்கும் பொதுவாகச் செயல்படவேண்டிய அரசு, சிறுபான்மையினரை மட்டுமே கருத்தில் கொண்டு செயல்படுவது நியாயமா?*

! சிறுபான்மையினருக்காகவும் செயல்படுவதில் தவறில்லை; சிறுபான்மையினரை மட்டுமே கருத்தில் கொண்டு செயல்படுவது தப்பு. அதே போல், பெரும்பான்மையினரை மட்டுமே கருத்தில் கொண்டு செயல்படுவதும் குற்றமே. இவையெல்லாம் பிரித்தாளும் சூழ்ச்சியின் பல வடிவங்களுள் சில.

● குலசை க.மீ.நஜ்முதீன், காயல்பட்டினம்

*? தந்திரம் - ராஜதந்திரம் - என்ன வேறுபாடு?*

! தந்திரம் - நீதிமன்ற எச்சரிக்கையை மிஞ்சுவதற்காக, உண்ணாவிரதம் என்ற பெயரில் பந்த் நடத்துவது.

ராஜதந்திரம் - ''நீதிமன்றத்தை மதிப்போம்'' என்று அறிக்கை விடுவது.

● என்.பாலகிருஷ்ணன், மதுரை

*? ''ஆதி திராவிடர், பழங்குடியினருக்குச் சேரவேண்டிய நலத்திட்ட உதவிகள் அவர்களைச் சென்றடையவேண்டும் என்கிற தார்மிக கோபம் அதிகாரிகளுக்கும் அலுவலர்களுக்கும் வேண்டும்'' என்கிறாரே கனிமொழி...?*

! இதற்குத் தார்மிகக் கோபம் எதற்கு? தார்மிக உணர்வு இருந்தாலே போதுமே! அரசியல்வாதிகள் அந்த உணர்வைத் தொலைத்துத் தலைமுழுகிய பிறகு, அதை அதிகாரிகளிடம் மட்டும் எப்படி எதிர்பார்க்க முடியும்?

● எம்.பாஸ்கர், திண்டுக்கல்

*? ''தி.மு.க. தடையில்லாமல் ஓடிக்கொண்டிருக்கும் ஜீவ நதி'' என்கிறாரே கருணாநிதி?*

! உண்மைதான். ஆனால், கழிவுநீர்

# தந்திரம்-ராஜதந்திரம்

* அபாய அஸ்திவாரம்!



# தராசு ?! நீங்கள் கேட்டவை

* கூட்டணி கூப்பாடு!



ஏராளமாகச் சேர்ந்து மாசுபடுத்துவதைத் தான் சகிக்க முடியவில்லை.

● த.சத்தியநாராயணன், அயன்புரம்

*? சாலையில் உள்ள இரும்புத் துண்டுகளைப் பொறுக்க காந்த வாகனம் இயக்குவது பற்றி...?*

! இரும்புத் துண்டுகளைக் காந்த வாகனம் ஈர்த்து அப்புறப்படுத்துவதில், வாகனங்களின் டயர்கள் சேதமடைவதைத் தவிர்க்கலாம். ஆனால் திடீர்ப் பள்ளங்களிலும், தடால் ஸ்பீட் பிரேக்கர்களிலும் விழுந்து எழுவதால் வாகனங்களே பாழாகின்றனவே!

● உஷா, சென்னை - 4

*? அகமதாபாத் பள்ளி ஒன்றில், தாமதமாக வந்த மாணவனுக்கு மைதானத்தைச் சுற்றி நான்கு முறை ஓடும்படி தண்டனை கொடுத்ததில், இரண்டாவது சுற்றிலேயே அவன் இறந்துபோனான். இதுபோன்ற தண்டனைகளைப் பள்ளிகள் தரலாமா?*

! கூடாது என்பதுடன், ஒவ்வொரு மாணவனும் எந்த அளவுக்குத் தண்டனையைத் தாங்கக்கூடும் என்பது ஆசிரியருக்குத் தெரிந்திருக்க வேண்டும். பெஞ்சு மேல் நிற்க வைப்பதுகூட சில மாணவர்களுக்கு ஆபத்தாக முடியக்கூடும். ஆசிரியர்களுடைய பொறுப்பு பல வகைப்பட்டது.

● அகிலா அன்புமணி, ஈரோடு ★

*? கடந்த ஓராண்டில் மட்டும் லடாக் முதல் அருணாசலப் பிரதேசம் வரையிலான நமது எல்லையில், சீனப் படையினர் 140 முறை ஊடுருவினர் என்று அப்பகுதி எல்லைக் காவல் தலைமை இயக்குனர் ஜெனரல் குற்றஞ்சாட்ட, இந்திய-சீன அயலுறவு அமைச்சர்கள் சந்திப்பில் பிரணப் முகர்ஜி இதைப் பற்றிய பேச்சே எடுக்காதது என்ன நியாயம்?*

! பேச்சுவார்த்தை தொடர்பான அறிக்கையில் இது பற்றிக் குறிப்பிடப்படவில்லையென்றாலும், பேச்சுவார்த்தையின்போது இதுகுறித்து கவனத்தை ஈர்த்திருப்பார் என்று நம்பலாம். ஆனால், 'எல்லைப் பிரச்னையில் முன்னேற்றம்' என்பதைத்தான் ஜீரணிக்க முடியவில்லை.

● என்.சண்முகம், திருவண்ணாமலை

*? ராம்லீலா நிகழ்ச்சியில் ராம-லட்சுமண வேடமிட்டவர்களுக்குப் பிரதமர் மன்மோகன் சிங், சோனியா காந்தி ஆகியோர் ஆரத்தி எடுத்து வழிபட்டது குறித்து...?*

! இஃப்தார் விருந்தில் பங்கேற்று கஞ்சி குடிக்கிற மாதிரி இதுவும் மரியாதை நிமித்தம் நடந்தேறும் சடங்கு.

● லெமூரியன், திருவண்ணாமலை

*? மிருகங்களில் முட்டாள்கள் உண்டா?*

# என்ன வித்தியாசம்?

! இருக்கின்றன; ஆனால், மனிதருள் மட்டுமே முட்டாள்தனமான மிருகங்கள் உண்டு.

● வே.சித்ரா, கும்மிடிப்பூண்டி

? சிறுநீரக மோசடி அதிகம் நடப்பது எதைக் காட்டுகிறது?

! வறுமை, அறியாமை இவற்றில் உழலும் மக்களை ஏமாற்றும் வஞ்சனை அதிகரித்து வருவதை.



✱ அநியாய மழுப்பல்!

● என்.சங்கரதாஸ், ஸ்ரீவில்லிபுத்தூர்

***? மத்தியில் ஐ.மு. கூட்டணி அரசுக்கு இடதுசாரிகள் வெளியிலிருந்து ஆதரவு கொடுப்பதற்கும், தமிழகத்தில் பா.ம.க. வெளியிலிருந்து ஆதரவு கொடுப்பதற்கும் என்ன வித்தியாசம்?***

! பா.ம.க. ஆதரவு கருணாநிதிக்குத் தலைவலி. இடதுசாரிகளின் ஆதரவு மன்மோகன் சிங்குக்குத் திருகுவலி. மொத்தத்தில் மக்களுக்கு மண்டை இடி!

● அ.ராஜா ரஹ்மான், கம்பம்

***? உலகப் பார்வையற்றோர் எண்ணிக்கை மூன்று கோடியே எழுபது லட்சம் - இதில் இந்தியாவில் மட்டும் ஒன்றரை கோடி பேர் உள்ளனர் என்பது அதிர்ச்சி தரும் தகவல் தானே?***

! நிச்சயமாய். சுதந்திரத்துக்குப் பின் தலைவர்கள், ஐந்தாண்டுக்குப் பிறகு வரும் தேர்தலை நினைக்காமல், ஐம்பதாண்டுகளுக்குப் பிறகு இந்நாட்டின் நிலை பற்றிச் சிந்தித்திருந்தால், குழந்தைகளுக்குப் போஷாக்கான உணவு கிடைத்திருக்கும்; இந்த அவல நிலை உருவாகியிருக்காது.

● உமரி பொ.கணேசன், மும்பை - 37

*? சந்தனக் கடத்தல் வீரப்பனுக்கு மணி மண்டபம் அமைக்க அவர் மனைவி முயன்று வருகிறாரே...?*

! அவர் முயற்சிகளை யாரும் தடுக்க முடியாது. ஆனால், ஆதரிக்காமலிருப்பதன் மூலம் அதிலுள்ள அபத்தத்தை உணர்த்தலாம். மாறாக, பரபரப்புக்கும் விளம்பரத்துக்கும் ஆசைப்பட்டு ஆதரிப்போர் மிகப் பெரிய அபாயத்துக்கு அஸ்திவாரம் நாட்டுகிறார்கள்.

● ப.காளிதாசன், வேட்டனூர்

***? சன் டி.வி.யில் இப்போதெல்லாம் கலைஞர் பற்றிய செய்திகளுக்கு அதிக முக்கியத்துவம் கொடுப்பதில்லையே..?***

! அழகிரி பற்றித்தான் அணுவளவுகூட பேசுவதில்லையே தவிர, தி.மு.க., ஸ்டாலின் என்று இன்னமும் 'சன்' குடும்ப சேனலாகவேதான் இருக்கிறது. என்ன, மோதலுக்குப் பிறகு உண்டான சின்ன கேப்பில் விஜயகாந்த், ஜெயலலிதா, சரத்குமாரெல்லாம் கொஞ்சம்கொஞ்சம் எட்டிப் பார்க்கிறார்கள்; அவ்வளவு தான்!

● ஆரூர் அரசு, மயிலாடுதுறை

*? கூட்டணியால் ஸ்திரமான முடிவு எடுக்க முடியவில்லை என புலம்பும் பிரதமர் பற்றி..?*

! குடும்பத்து உறுப்பினர்களை அரவணைத்து நடத்திச் சென்று பிரச்னைகளுக்குத் தீர்வு காணவேண்டிய குடும்பத் தலைவனே, மனைவி சரியில்லை, மகன் சரியில்லை என்று புலம்பினால், அதனால் அக்கம் பக்கத்தார் சிரிப்பார்களே தவிர, பரிதாபப்பட மாட்டார்கள்! ●

☐ ரூ.100/- பரிசுபெறுபவர் :

வீ.முத்தையா,
திருநெல்வேலி

✱ ரூ.50/- பரிசு பெறுபவர் :

அகிலா அன்புமணி,
ஈரோடு













**மதுரை ஆதீன வரலாறு - ஸ்ரீ ஞான சம்பந்த தேசிகர், மதுரை ஆதீனம்.**

1500 ஆண்டுகளுக்கு முன்பு திருஞான சம்பந்தரால் தோற்றுவிக்கப்பட்டு, இன்றும் ஆன்மிகம் தவழ இயங்கி வரும் மதுரை ஆதீனத்தின் வரலாற்றுத் தொகுப்பு. துவங்கிய நாள் முதல் இந்நாள் வரை ஆதீனத்துக்கு வருகை புரிந்துள்ள உள்நாட்டு, வெளிநாட்டு மகான்களின் சந்திப்புக் குறிப்புகளையும், ஆதீனத்தின் படிப்படியான வளர்ச்சியையும் விரிவாகத் தொகுத்திருக்கிறார்கள்.

**மலைக்கோட்டை இளவரசி - ஆசா.ஆரோக்கியசாமி, வைரவன் பதிப்பகம், 204, யமுனா தெரு, எல்லீஸ் நகர், மதுரை - 16. விலை:ரூ.42.00**

இன்றைய நடுத்தர வர்க்கக் குடும்பங்களில் நடக்கும், யதார்த்த நிகழ்வுகளை மையமாகக் கொண்ட சிறுகதைத் தொகுப்பு. அருகில் அமர்ந்து சொல்வதைப் போன்ற எளிய நடையில் எழுதப்பட்டிருக்கிறது. கட்டமைப்பு இன்னும் சிறப்பாக இருந்திருக்கலாம்.

**உணவும் பானமும் - சி.வே. ராதா கிருஷ்ண சாஸ்திரி அகஸ்தியர் பதிப்பகம், 9-ஏ, க்ளைவ்ஸ் பில்டிங், நந்திகோயில் தெரு, தெப்பக்குளம், திருச்சி - 620 002. விலை : ரூ.95/-**

நம்முடைய தேகவாகு, வாயு, பித்தம், கபம் ஆகியவற்றில் எந்த வாகில் அமைந்துள்ளது என்பதை அறிந்து, அதற்கு எந்தெந்த உணவு வகைகள் ஏற்றுக்கொள்ளத் தக்கவை, ஏற்றுக்கொள்ளத்தகாதவை என்று பட்டியலிட்டு, நமக்கு நலமிக்க வாழ்க்கை முறையை விளக்குகிறார் நூலாசிரியர்.

**அசத்தல் நிர்வாகிக்கு அற்புத வழிகள் 31- அருணா ஸ்ரீனிவாசன், விகடன் பிரசுரம், 757, அண்ணா சாலை, சென்னை - 600 002. விலை:ரூ.70/-**

# நெகடிவ் டு பாஸிடிவ்

மேலாண்மை சார்ந்த அந்தக் காலத்துக் கோட்பாடுகளையும், மேலாண்மைப் பாட நூல்களில் பதிக்கத்தக்க இந்தக் காலத்து நிகழ்வுகளையும் சுவையாக எழுதியுள்ளார் நூலாசிரியர். இப் புத்தகத்தில் குறிப்பிடப் பட்டுள்ள நிர்வாகத்தில், எதிர்மறைக் கூறுகளை உடன்பாடாக மாற்றும் சூத்திரங்கள் குடும்ப வாழ்வுக்கும், சமூக வாழ்வுக்கும்கூடக் கைகொடுக்கும்.

**- ராஜா**




பாக்க முடியாதுல''ன்னான் பரமன். இப்படி புள்ளிச்சேவல் ஓர் அதிசய பொருளாயிட்டு வந்தது ஊர்நாட்ல.

ஒரு சாயங்காலத்துல எர்ராண்டு மாமா குப்பை மேல, வர்ணப்புள்ளிச் சேவல் காலை முன்னுக்கும் பின்னுக்கும் நீட்டி நீட்டி இரை பெறக்கிக்கிட்டு இருக்கு.

# செவக்காட்டுச்

## வர்ணப் புள்ளிச் சேவல் – 1

ஊர்லயே பெரிய பணக்காரு போத்திசு நாய்க்கரு. அவர் வீட்டுக்குத்தான் மொதமொதலா டீ.வி. வந்துச்சு. அங்கதான் நாங்க படம் பாக்கப் போவோம். அவரு விரட்டிவிட மாட்டாரு. ஆனா, சத்தங்கித்தம் போடாமே பாருங்கலம்பார்.

ஒரு தரம் அவரு வீட்டுல ஒளியும் ஒலியும் பாத்துக்கிட்டிருந்தோம். அப்பம் போல திருணைல ஒரு சேவல் லாந்துது. பாத்தா செங்காம்பட்டி செவப்புல மேலெல்லாம் புள்ளி, புள்ளியா இருக்கு. இப்படி ஒரு சேவலை இதுக்கு முன்னாடி ஒரு பயலும் பாத்ததில்ல. பொதுவா ஊர்ல கோழியுஞ் சேவலும் சாம்பல் கலருல இருக்கும். செவலை, மஞ்சள்னுதான் திரியுதுக. சிலது செவப்பும் தண்ணிக் கோலிக்காய் கலர்லயும் கெடக்கு; கறுப்பும் அலையுது. இது என்னன்னா புதுங்காட்டியா இருக்கே.

அம்புட்டுன்னா போதாதா, ''ஏல போத்திசு நாய்க்கரு வீட்டுல வர்ணப்புள்ளி சேவல் இருக்கு''ன்னு பாக்காதவனுங்கூட சொல்ல ஆரம்பிச்சிட்டாங்க. ''குப்பைல மேய வருமால''ன்னு சுப்பிரமணி கேட்டான். ''ஆமால, குப்பைல மேயாம சங்கரங்கோயிலு கோபுரத்துலயால மேயும்''னான் துரைப் பயல். ''ஏல கல்லகில்லக் கொண்டு எறிஞ்சிராதீங்கல. பெறவு டீ.வி.

அப்போம் அனைஞ்சக்தி கோயில்லர்ந்து கள்ளப் பெறாந்து பறந்து ஊர்மேல வருது. அனைஞ்சக்தி கோயில்ல ரெண்டு வேப்ப மரங்க, ரெண்டு புளிய மரம், இதுகளுக்கு நடுக்குண்டுல ஆலமரம். எல்லாஞ்சேந்து ஒண்ணுக்கொன்னு பெணைஞ்சிக்கிட்டு ஒரு பச்சமலை மாதிரி தெரியுங்க. அந்த மரங்கள்ல அஞ்சாறு பெறாந்து கிடக்குது. அதுக ஊருக்குள்ள வந்து கோழிக்குஞ்சுகளைத் தூக்கிட்டுப் போயிரும். அதை மாதிரிதான் அன்னைக்கும் ஒண்ணு வந்தது.



**க**விஞர் வே.இராமசாமி, நெல்லை மலையான்குளம் கிராமத்தைச் சேர்ந்தவர். 'ஏலேய்' என்கிற கவிதைத் தொகுதியின் மூலம் பரவலாக அறியப் பட்டவர். திரைப் படங்களுக்குப் பாடல் எழுதும் முயற்சியில் இருப்பவர், தற்போது சென்னையில் வசித்து வருகிறார். 'கிணற்றுக்குள் முளைத்த மருதாணி' என்கிற அடுத்த கவிதைத் தொகுதி விரைவில் வெளிவர உள்ளது.



# சித்திரங்கள்!

**வே.இராமசாமி**

கள்ளப் பெறாந்து வந்தா கோழிக 'கெக் கெக்கெக்'னு செடி செத்தைல போயி பம்முங்க. குஞ்சிகள் கண்டமானிக்குக் கிய்யா கிய்யான்னு ஓடும். ஒவ்வொரு கோழி அந்த இடத்துலேயே படுத்துக் கிடும். குஞ்சிங்கெல்லாம் அது றெக்கைக் குள்ள முண்டிக்கிடும். அதுக்குள்ள இருந்து ஒரு வால் பிடிச்ச குஞ்சி, கண்டங்கத்திரி முள்ளு கெணக்கா செறகைத் துளைச்சி அலகை நீட்டும். ஆனா, அன்னைக்கு 'பெறாந்தாவது கிறாந்தாவது எனக் கென்ன'ன்னு நிக்காரு வர்ணப்புள்ளியார். சேவல்னாலும் பெறாந் துன்னா ஒடனே ஓடாட்டியும், ஒத்தச் செறக ஒரு சாச்சு விரிச்சிட்டு மெல்ல விலகிடுங்க. ஆனா, அண்ணாச்சி மொறைச்சுப் பாக்காரு.



பெறாந்துல ரெண்டு வகை இருக்கு. ஒண்ணு கருவ மரத்தூரை வெட்டிபோல் கம்பு உச்சில நிப்பாட்டின மாதிரி. இன்னொன்னு கழுத்துல வெள்ளையா பஞ்சு ஒட்டுன மாதிரி இருக்கும். அதான் கிருட்ணப் பருந்து. அதை எல்லாரும் கும்பிடுவாக. ஏன்னா கிருட்ணரு எங்களுக்குச் சாமியாக்கும். ஆனா, குஞ்சியைத் தூக்க வந்தா சாமியாவது கீமியாவது எல்லாத்துக்கும் வசவுதான். இதுகபோல வல்லூருன்னு ஒண்ணு... வெள்ளைப் புறா மானிக்குத் தெம்படும். ஆனா, புறாவைவிட கொஞ்சந் தண்டியா இருக்கும். இதுவும் கோழிக் குஞ்சக் கண்டா பழியாத் தூக்கும். நின்ன இடத்திலயே ஒரு மொழத்துக்குள்ள ரெம்ப நேரம் பறக்கும். இதுகள கண்டுட்டுக் காக்காய்ங்களும் 'எங்களால ஏண்டாத நாங்க தூக்குதம்'னு இளங் குஞ்சிகளைக் கவ்விட்டுப் போயிருங்க. இந்த மாதிரி வல்லான கண்டனுங்கள்லாம் குஞ்சிகளைக் கொத்தித் திங்கறதாலே கோழி வளக்கவக திண்டாடுனாங்க. இதனால் வர்ணப் புள்ளி, பெறாந்தை முறைச்சுப் பாத்தது ஊருக்குள்ள பெரும்



**சேவலு கழுத்து ரோமம் வெடைக்க பெறாந்துக்கு ஓட்ரே குடுப்பு குடுத்துருச்சி. பெறாந்து எங்க போச்சுன்னே தெரியலை.**



பேச்சாயிருச்ச. அஞ்சாறு பயக வர்ணப்புள்ளி செறகை பொயித்ததுக்குள்ள வெச்சிருக்காங்க - மயில் இறகை வெச்ச மாதிரி. இன்னுஞ் சில 'பெரிய மனுஷங்க' நோட்டுக்குள்ள ஒரு வேப்பிலையும் வெச்சிருப்பாங்க.

இன்னும் கொஞ்சநாள் கழிச்சு வடக்கேருந்து கள்ளப் பெறாந்து அப்படியே படையெடுத்து வர்ற மாதிரி வருது. வந்து கரெண்டு போலு மேல உக்காந்து, துட்டுப் போர்வையை மூடினவன் மாதிரி றெக்கையைத் தளத்திவிட்டு நிக்கி. விரிச்சதுன்னா றெக்கையா அது? சும்மா ரெண்டு திக்கிலும் ரெண்டு களகு கெணக்கா இருக்கும். அங்கனருந்து பாக்க வேண்டியது. சடக்குனு தரையத் தொட்டுக் குஞ்சிகளைக் கவ்வ வேண்டியது.

அன்னிக்கு என்ன நடந்ததுன்னா, வர்ணப்புள்ளியாரும் பெறாந்தும் ஒருத்தர ஒருத்தர் எதுத்துக்கிட்டுப் பாக்காங்க. கோழிக - குஞ்செல்லாம் 'எங்களுக்கெல்லாம் ஏதுந்தெரியாது'ன்னு இருக்கிறலெக்குத் தெரியாம ஒளிஞ்சிக்கிட்டன. மெல்ல பெறாந்து கரண்டு போல்ல இருந்து பறந்து வந்து குப்பை மேட்டுக்கு மேல ரவுண்டடிக்கு. வர்ணப்புள்ளியும் அண்ணாக்கப் பாக்கு. கெக்கர கெக்கர... கெக்கரக்கோன்னு பெலமா கத்துது.

டபீல்னு ரெண்டும் மோதிக்கிட்டன. பெறாந்து இறங்குன வேகத்தில குப்பைல சட்டேர்னு செறக அடிக்க.. வர்ணப்புள்ளியும் கெலிக்கக் கெலிக்கப் பறந்தடிக்குதய்யா.

அதுக்குள்ளியும் பாத்த ஆளுங்கெல்லாம் 'ச்சோவ் ச்சோவ்'னு கத்தினதும் கள்ளப் பெறாந்து விருட்டுனு வடக்கானிக்குப் போயிருச்ச. அதுல இருந்து தெனம்தெனம் சாயங்காலம்போல கள்ளப் பெறாந்து வந்து குப்பைய நோட்டம் போட்டது. வர்ணப் புள்ளியார் இருந்தார்னா இறங்கி அடிச்சும் பாத்தது.

ஒரு நா காலைல பத்துமணி இருக்கும். டீ.வி.ல மகாபாரதம் பாத்துக்கிட்டு இருந்தம். 'மகாபாரத் மகாபாரத்'னு பாட்டுக்கட்டம் நடக்கு. டீ.வி.க்குள்ள ஒரு சங்கு பூம்பூம்ங்குது. அப்பம்போது படம் ஆடுனது. நாய்க்கரு ''எல என்னன்னு பாருங்கல''ன்னாரு. சுப்பிரமணி வெளில போய்ப் பாத்தான். ''யாத்தே ஆன்டெனாக் கம்பில பெறாந்து நிக்கி. பெறாந்து நிக்கி''ன்னு சத்தம் போட்டான். எல்லாரும் ஓடியாந்து பாத்தா 'இங்கன நிக்குது நாந்தா மூல'ன்னு பெறாந்து சொல்லுது. நாய்க்கரும் பாத்தாரு 'இந்தச் சிறுக்கி வியளை கல்லக் கொண்டி எறிங்கல'ன்னுட்டு வீட்டுக்குள்ள போய்ட்டாரு.

சரி, அதுதான் நொரநாட்டியம் பண்ணுதுன்னா வர்ணத்தார் பேசாம இருந்தாரா? சாயங்காலம் குப்பைமேட்டுக்கு உலாப் போறாரு. 'வால, உனக்குத்தான்ல காத்திருந்தேன்'னு பெறாந்து எறங்க, ரெண்டும் சிறவுட்டு டமார் டமார்னு அறையதுக. பெறாந்து மேல மேல பறக்கிறதும் தரை எறங்குறதுமா சண்டை போடுது. சேவலு கழுத்து ரோமம் வெடைக்க ஒட்ரே குடுப்பு குடுத்துருச்சி. பெறாந்து எங்க போச்சுன்னே தெரியலை. விடியுமுன்னே பாத்தா இடிகெணத்துக்குள்ள ஒத்தச் செறவ விரிச்ச மானிக்குக் கெடக்கு.

பேரு வாங்குன வர்ணப்புள்ளிச் சேவலுக்கு நாய்க்கரு தனித் தீனிப் போட்டு வளத்தாரு. பனிங்கு மாடத்துல போட்டு அடைச்ச பந்தோஸ்து பண்ணாரு. பனிங்குலேயே கெடந்தா என்னாறது 'நானும் போயிட்டு வர்றேன்'னு வர்ணப்புள்ளியாரும் மண்டையைப் போட்டுட்டாரு.

*(மண் வாசம் வீசும்)*




# சித்தப்பூ கொளுத்திய மத்தாப்பூ!

## காட்சி - 1

'பாடாவதி' ஃபிலிம்ஸ் என போர்டு வைத்திருந்த பத்துக்குப் பத்து அறையில், தயாரிப்பாளர் தாண்டவராயன் அமர்ந் திருக்க, கதவைத் தட்டிவிட்டு ஒல்லியான தேகத்துடன் உள்ளே வருகிறார் இயக் குநர் இம்சை அரசன்.

**இம்சை அரசன்:** சார் உள்ள வரலாமா?

**தாண்டவராயன்:** தாராளமா வாங்க... என்ன விஷயம்?

**இ.அரசன்:** தீபாவளிக்கு 'ஸ்பெ ஷல்'ன்னு நாடகம் எடுக்க கதை கேட்கறதா கேள்விப்பட்டேன்; அதான்...

**தா.ராயன்:** மாந்தோப்பையும் மண் லாரியையும் பிடிச்சு வித்திட்டு, நாப் பதாயிரம் கொண்டு வந்திருக்கேன். கதைய சொல்லு.

**இ.அரசன்:** *(டைட்டில்)* 'சித்தப்பு கொளுத்திய மத்தாப்பு'

**தா.ராயன்:** டைட்டில் நல்லா இருக்கு. கதைய சொல்லுங்க.

**இ.அரசன்:** உடனே கேட்டா எப்படி சார்? கதையில நாலஞ்சு இடத்துல முடிச்சு போட்டுருக்கேன். அதை எடுக்கணும்னா ஊட்டியில ஒரு வாரம் டிஸ்கஷன் பண்ணணும்.

**தா.ராயன்:** முடிச்சு அவுக்க ஊட்டிக்குத் தான் போகணுமா. இங்கயே அவுத்தா முடியாதா?

**இ.அரசன்:** ஓ... தாராளமா முடியும். நீங்க தலையில துண்டை போட்டுக் கிட்டு... ஸாரி, தலைக்குத் துண்டை வெச்சிகிட்டுத் தூங்குங்க. நான் கதவைச் சாத்திக்கிட்டுக் கதைய 'கபால்'னு புடிச் சிடறேன்.

**தா.ராயன்:** *(கண் கலங்கியபடி)* தம்பி, இந்த நாடகம் நல்லா வந்ததுன்னா எங்க ஊர் முத்தாளம்மனுக்கு மொட்டை போட றதா வேண்டியிருக்கேன்.

**இ.அரசன்:** மொட்டைதானே...? கண் டிப்பாகப் போடுவீங்க.

## காட்சி - 2

தயாரிப்பாளர் தாண்டவராயன் ஆபீஸ் வாசலில் அமர்ந்திருக்க, உள்ளே

உத்தமபுத்திரன்




**உதவி இயக்குநரோடு கதை விவாதம் நடத்திக்கொண்டிருக்கிறார் இம்சை அரசன்.**

**இ-அரசன்:** யோவ்... உதவி. நாப்பதாயிரம் பணத்தோட ஒருத்தன் சிக்கியிருக்கான். ஆறு மாச ரூம் வாடகை, பெட்டிக்கடைக் கடன், ஹோட்டல் பாக்கி எல்லாத்தையும் அடைச்சுடணும்.

**உதவி இயக்குனர்:** ஆமாண்ணே... என் செல்ஃபோனுக்கு 'ரீசார்ஜ்' பண்ணணும். நானும் எவ்வளவு நாளைக்குத்தான் ஃபோன் பேசற மாதிரியே நடிக்கறது. சரி... தயாரிப்பு வந்து கதை கேட்டா என்ன சொல்வீங்க?

**இ-அரசன்:** சாப்பிட்ட பிரியாணிக்கு... எதையாச்சும் சொல்லித்தானே ஆகணும். நான் பேசிக்கறேன்; நீ கம்முனு இரு.

*(அப்போது தயாரிப்பாளர் உள்ளே வருகிறார்.)*

**இ-அ:** கதாநாயகனோட சித்தப்பா தீபாவளி அன்னைக்கு ஒரு மத்தாப்பு கொளுத்தறார்.... கொளுத்தறார். மத்தாப்பு பத்தவே மாட்டேங்குது. இதுக்காக மூணு தீப்பெட்டிய வேஸ்ட் பண்றார்.

**தா.ராயன்:** ஏன்? விளக்குல கொளுத்தியிருந்தா 'பக்'குன்னு பத்தியிருக்குமே...

**இ-அரசன்:** அதான் இல்லை. சித்தப்பாவோட பெத்தப்பா, 'மகனே மத்தாப்பை விளக்குல கொளுத்தினா வெளங்காம போயிடுவே. குச்சியில கொளுத்தினா குபேரனா ஆவே...' 'னு சாகும்போது சொல்லிட்டுச் செத்துப் போறார். அதனால மூணு தீப்பெட்டி குச்சியிலயும் பத்த வைக்க முடியாம. கட்டியிருந்த வேட்டிய 'சுபால்'னு உருவி தலையில கட்டிக்கிறார்.

**தா.ராயன்:** ஏன்?

**இ-அரசன்:** 'ஒரு தீக்குச்சியில பத்த வைக்கிற மத்தாப்பு எப்போ கெடைக்குதோ, அதுவரைக்கும் மத்தாப்பும் கொளுத்த மாட்டேன். வேட்டியும் கட்ட மாட்டேன்'னு சபதம் எடுக்கிறார்.

**தா.ராயன்:** அப்புறம் என்னாச்சு?

**இ-அரசன்:** அப்படி ஒரு மத்தாப்பைத் தேடிக்கிட்டு சிவகாசி போறார் நம்ம ஹீரோ. அங்க பட்டாசுக் கடைக்காரன் மகளுக்கும் ஹீரோவுக்கும் காதல் பத்திக்குது.

**தா.ராயன்:** *(மீண்டும் கண்கலங்கியபடி)* வாரே வா... வெரிகுட். நீங்க கதை சொல்லச் சொல்ல... கோயில்ல மொட்டைப் போடற மாதிரி கண் முன்னாடி தெரியும்.

**இ-அரசன்:** இப்போ ஹீரோ மத்தாப் போட வந்தானா... பட்டாசுக்கடைக்காரன் மகளோட வந்தானங்கறதுதான் க்ளைமாக்ஸ்.

**தா.ராயன்:** *(உற்சாகத்துடன்)* ஓ.கே. ஓ.கே உடனே ஷூட்டிங் போடுலாம்.

**இ-அரசன்:** அதுக்கு முன்னாடி ஆர்ட்டிஸ்டுங்களுக்கு அட்வான்ஸ் தரணும்.

**தா.ராயன்:** கொடுத்துட்டாப் போச்சு.

## காட்சி - 3

***(அலுவலக வாசலில் துணை நடிக-நடிகைகள் அமர்ந்திருக்கின்றனர். உதவி இயக்குநர் ஒவ்வொருவராக அனுப்புகிறார். அப்போது நாற்பது வயதில் நடிமனான பெண் அதீத மேக்கப்புடன் உள்ளே வருகிறார்)***

**தா.ராயன்:** யாருய்யா இது. சுவத்துக்கு சுண்ணாம்பு அடிச்ச மாதிரி. ஹீரோவுக்கு அம்மா கேரக்டர் இருக்கா என்ன?

**இ-அரசன்:** அம்மா இல்ல சார்... இவங்கதான் ஹீரோயின். 'காந்தக் கன்னி' காஞ்சனர். இவங்க நடிச்ச 'இரவோடு இரவாக' படத்தை ஏழு வருஷமா எடுத்துக்கிட்டு இருக்காங்க.

**தா.ராயன்:** இன்னும் முடியலையா?

**இ.அரசன்:** இல்லை. புரொடியூசர் ராவோடு ராவா ஆடிட்டார். படம் பாதியில நிக்குது. நல்ல நடிகை. அட்வான்ஸ் கொடுங்க. நடிப்பை நான் வாங்கறேன்.

*(ஒவ்வொருவருக்கும் அட்வான்ஸ் கொடுக்கப்படுகிறது. ஒரு வாரத்துக்குப் பிறகு...)*

**தா.ராயன்:** யோவ் டைரக்டரே... என்னைய்யா இது... கொண்டு வந்த பணம் பத் தாம, மறுபடியும் கந்துவட்டிக்கு வாங்கிட்டு வந்த பணமும் காலியாயிடுச்சி. தீபாவளிக்கு வேற நாள் ரொம்ப குறைச்சலா இருக்கு. தினம் லெக்பீஸ் பிரியாணியா சாப்டுட்டுத் தூங்கலியே தவிர ஷூட்டிங் போக மாட்டேங்கிறியே...

**இ.அரசன்:** என்னது... டைரக்டரையே கேள்வி கேக்குறியா... டைரக்டரைக் கேள்வி கேட்ட தயாரிப்பாளர் வாழ்ந்ததா சரித்திரம், வரலாறு, பூகோளம், புவியியல் எதுவும் இல்லை.

*(மறுநாள் மாலை ஒரு வீடியோ கேசட்டுடன் அலுவலகம் வருகிறார் இம்சை அரசன்)*

**இ.அரசன்:** (கேசட்டை நீட்டியபடி) இந்தாங்க... ராவும் பகலுமா ஷூட்டிங், எடிட்டிங்.. கட்டிங்... ஸாரி டப்பிங் எல்லாம் முடிச்சுக்கொண்டு வந்திருக்கேன். இந்தத் தீபாவளியை மறக்க முடியாது. அடுத்த தீபாவளிக்கு அஜீத்தை வெச்சி படம் எடுக்க என்னைத்தான் தேடப் போறீங்க.

*(தாண்டவராயன் படைத்தளபதி வீரவாள் பெறுவதுபோல் பவ்யமாகிக் குவிந்து கேசட்டைப் பெற்றுக்கொண்டு, உற்சாகத்துடனும், விசிலடித்தபடியும் டீ.வி நிலையம் நோக்கிச் செல்கிறார். டீ.வி நிலையத்தில் வீடியோ கேசட்டை வாங்கிச் சென்ற நிலைய அதிகாரி சற்று நேரத்தில் கடுப்புடன் வெளியே வருகிறார்...)*

**அதிகாரி:** யோவ்... தடித் தாண்டவராயா என்னைய்ய இது?

**தா.ராயன்:** தீபாவளி ஸ்பெஷல் நாடகம். 'சித்தப்பு கொளுத்திய மத்தாப்பு'

**அதிகாரி:** க்கும்.. சித்தப்பும் இல்லை, பெரியப்பும் இல்லை. எவனோ உன்னை ஏமாத்தி ஆப்பு வெச்சிட்டான்.

**தா.ராயன்:** (அதிர்ச்சியுடன்) என்னங்க சொல்றீங்க...

**அதிகாரி:** ஆமாய்யா... ஏதோ சத்திரத்துல எடுத்த கல்யாண கேஸட்டைக் கொடுத்து நாடகம்னு ஏமாத்தியிருக்கான்.

**தா.ராயன்:** 'காந்தக்கன்னி' காஞ்சனாவே வெச்சு எடுக்கறேன்னு சொல்லி அட்வான்ஸ் எல்லாம் கொடுத்தனே...

**அதிகாரி:** காஞ்சனாவும் இல்லை; காமாட்சியும் இல்லை. இந்தா பிடி.

*(கேசட்டைக் கொடுத்து, வெளியே பிடித்துத் தள்ளாத குறையாக விரட்ட, ஆத்திரத்தோடும், தலையில் துண்டோடும் டீ.வி ஸ்டேஷன் விட்டு வெளியே வருகிறார் தாண்டவராயன், அப்போது கையில் சில பேப்பர் கட்டுடன் இளைஞன் தாண்டவராயனிடம்)*

**தூறல் கவிதை**




**இளைஞன்:** சார்... நீங்கதானே தாண்டவராயன்...?

**தா.ராயன்:** ஆமா... அதுக்கென்ன இப்போ...

**இளைஞன்:** எங்கிட்ட பொங்கலுக்குப் பொருத்தமா ஸ்பெஷல் நாடகக் கதை இருக்கு... சொல்லட்டுமா...?

***(என்று அவன் முடிக்கும் முன்பாக... துண்டை மடித்து விசிறிக்கொண்டு அவனை விரட்ட.... இளைஞன் எதுவும் புரியாமல் பின்னங்கால் பிடறியில் பட ஓட்டமெடுக்கிறான்.)***



# ஆர்யாவின் அடுத்த கட்டம்!

நீண்ட நாட்களுக்குப் பிறகு வெளிவரவிருக்கும் ஆர்யாவின் 'ஓரம்போ' பட இயக்குநர்கள் புஷ்கர் - காயத்ரி. அமெரிக்காவில் சினிமா தொழில்நுட்பம் படித்திருக்கும் இவர்கள், 'ஓரம்போ' படம் குறித்து நம்மிடம் பேசினர்...

''ஓரம்போ படம் ஆர்யாவுக்கும் பூஜாவுக்கும் தமிழ் சினிமாவில் மீண்டும் தனியிடத்தைப் பெற்றுத் தரும் என்பதில் சந்தேகமில்லை. இந்தப் படத்தின் ட்ரெய்லர் தொலைக்காட்சிகளில் சிறப்பான வரவேற்பைப் பெற்றிருப்பதால், டி.ஐ. தொழில்நுட்பம் மூலம் மேலும் பட்டை தீட்டப்பட்டு, திரையரங்குகளில் திரையிட திட்டமிடப்பட்டு வருகிறது.

'ஓரம்போ'வில் ஆட்டோக்கள் மிக முக்கிய பங்கு வகிக்கின்றன. நிஜமான ஆட்டோ டிரைவர்களும் முக்கிய கதாபாத்திரங்களாக நடித்திருக்கின்றனர். ஆட்டோக்களுக்குக்கூட டூப் போட்டிருக்கிறோம். ஆனால், ஆர்யாவுக்குப் போடவில்லை. சண்டைக் காட்சிகளில் நிஜமாகவே ரொம்ப ரிஸ்க் எடுத்து நடித்திருக்கிறார். இந்தியாவிலேயே ஒரு படத்துக்கு 3D கேம் உருவாக்கப்பட்டது 'ஓரம்போ'வுக்குத்தான். www.orampo.com என்ற இணைய தளத்தில் இதனை அனைவரும் பார்வையிடலாம்; விளையாடலாம்.

படத்தில் வரும் ஆட்டோக்களின் சப்தம் இயற்கையானதாக இருக்க வேண்டும் என்பதற்காக, வெவ்வேறு ஆட்டோக்களை வரவழைத்து, அவற்றின் ஒலியை நவீன மைக்குகள் கொண்டு பதிவுசெய்து, படத்தில் பயன்படுத்தியிருக்கிறோம். பிரியாணி விற்கும் பெண்ணாக நடித்திருக்கும் பூஜா, அந்தக் கதாபாத்திரமாகவே மாறிவிட்டார். அதேபோல், ஆட்டோ டிரைவராக வரும் ஆர்யாவும் லோக்கல்தனமாய் இறங்கி வாழ்ந்திருக்கிறார். இருவருக்குமான கெமிஸ்ட்ரி இந்தப் படத்தில் சூப்பராய் ஒர்க்கவுட் ஆகியிருக்கிறது. முதலில் 'ஓரம்போ'வைக் குறும்படமாக எடுத்தோம். அதைப் பார்த்து இம்ப்ரஸான ஆர்யா, உடனே நடிக்க ஒப்புக்கொண்டார். அவரை அடுத்த கட்டத்துக்குக் கொண்டு செல்லும் முயற்சியாக 'ஓரம்போ' அமையப் போவதில் ஆச்சர்யமில்லை!''

- மதுமிதா

Registered with the Registrar of Newspaper of India under No.1041/57*Registered No.TN/CC(S)DN/144/06-08-Licensed to post without prepayment under PMG's Licence No.WPP TN/CC(S)DN/70/06-08-Registered as a Newspaper in Srilanka.